# சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

## ரமோலா

என்னுடைய சருமமே எனக்கு முதல் கவலை என்கிறார் ரமோலா. அவர் தவறாமல் லக்ஸ் டாய்லட் சோப்பை உபயோகித்து தன் சருமத்தை அதிக சுத்தமாகவும், மிருதுவாகவும் வைத்துக்கொள்ளுகிறார். என் சரும அழகைக் காப்பாற்றிக் கொள்ள லகுவான முறை இது தான் என்று கூறுகிறார். மேலும் இந்த சுத்த நறுமணமுள்ள சோப்பின் நுரை ஸ்திரீகளின் சருமத்தை சுத்தமாகவும், மிருதுவாகவும், மாசில்லாமலும் வைத்துக்கொள்கிறதென்று அவர் உறுதியாக நம்புகிறார்.




## லக்ஸ் டாய்லட் ஸோப்

LEVER BROTHERS (INDIA) LIMITED

# தலைமை வகித்தல்

# T.V.S. முன்னிற்கிறது




சென்னை ராஜ்தானியில் மற்ற தயாரிப்புகளைவிட அதிகமாக T.V.S. ப்ரொடியூசர் கேஸ் பிளான்டுகள் உபயோகத்திலிருக்கின்றன. எல்லா இடங்களிலும் டிரக், லாரி சொந்தக்காரர்கள் T.V.S. பிளான்டு உபயோகிப்பது எளிது என்றும் செலவில் மிக சிக்கனமுள்ளது என்றும் சொல்லுகிறார்கள்.

7000-க்கு மேற்பட்ட பிளான்டுகள் இந்தியாவில் விற்பனை ஆகி இருக்கின்றன.

... அதுதான் T. V. S. முன்னிற்பதற்குக் காரணம்.




**T.V. சுந்தரம் அய்யங்கார்**

அன் சன்ஸ், லிமிடெட்.

TVSK-16-TM **மதுரை & மதராஸ்**

சுயமாக
வெளுக்கும் நுரை
என்பது
என்ன?

ஸன்லைட் கெமிஸ்டு
சொல்லுகிறார் . .

“அசுத்தமான ஆடைகளிலிருந்து அழுக்குகளை தானாகவே போக்கக்கூடிய நுரைக்கே சுயமாக வெளுக்கும் நுரை என்று பெயர். அது எப்படி வேலை செய்கிறது? ஸன்லைட் நுரையில் "பிராணசக்தி" வாய்ந்த சோப் இருக்கிறது. பிராணசக்தி' வாய்ந்த சோப்பிற்கு அழுக்கைப் போக்கக்கூடிய சக்தி நிறைந்திருக்கிறது அது தொட்ட உடன் அழுக்கைப பற்றிக்கொண்டு தன்னுடன் அழுக்கை எடுத்துவிடுகிறது. ஆகையால் அழுக்கடைந்த ஆடைகளை ஸன்லைட் நுரையினால் கசக்கினால் இந்த 'பிராணசக்தி'யானது உடனே வேலை செய்து நுரையை தண்ணீரில் அலசின உடன் அழுக்குப் போய்விடுகிறது”

# ஸன்லைட் சோப்




## சுயமாக வெளுக்கும் நுரை உடையது

5 62-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு




மலர் 4
இதழ் 44

1945 ஜூன் 10

பார்த்திப ௵
வைகாசி 28





டாக்டர் ஸையத் மூகம்மது, காங்கிரஸ் காரியக் கமிட்டியில் நீண்டகாலமாக இடைவிடாமல் ஸ்தானம் வகித்து வந்தவர்; மகாத்மா காந்தியின் பரிபூரண நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்; பீஹார் மாகாணத்தில் ஸ்ரீ ராஜேந்திர பிரஸாதுக்கு அடுத்த தலைமை ஸ்தானத்தை வகித்து வருகிறவர்.




பத்து நாளைக்கு முன்பு டாக்டர் ஸையத் மூகம்மது சென்னைக்கு வந்திருந்தார். கோகலே ஹாலில் நடந்த பெரிய பொதுக் கூட்டத்தில் பேசினார். முதன் முதலில் என்ன பேசினார், தெரியுமா?

“வடநாட்டுத் தலைவர்களாகிய நீங்கள் ஏன் அடிக்கடி எங்கள் தென்னாட்டுக்குப் பிரசாரம் செய்ய வருவதில்லை என்று ஒருவர் என்னைக் கேட்டார். தென்னாட்டில் ராஜாஜியைத் தலைவராகப் பெற்றிருக்கும் உங்களுக்கு நாங்கள் வந்து புதிதாக என்ன சொல்லப் போகிறோம் என்று பதில் சொன்னேன். ஸ்ரீ சங்கராச்சாரியாரையும் ஸ்ரீ ராமானுஜாச்சாரியாரையும் பெற்றெடுத்த தென்னாடுதான் இன்று இராஜகோபாலாச்சாரியாரையும் அளித்திருக்கிறது. அவரைத் தலைவராகப் பெற்றிருப்பது உங்களுடைய பாக்கியம்!” என்றார்.

மேலும், “ராஜாஜியின் யோசனையை மகாத்மா ஒப்புக்கொண்டு ஜனாப் ஜின்னாவுடன் ராஜி பேச்சு நடத்தியதின் பலனாக, முஸ்லிம்களில் 100-க்கு 90 பேரின் மனக்கசப்பு நீங்கிவிட்டது; ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை மிகவும் நெருங்கி வந்துவிட்டது” என்றும் கூறினார்.

இந்த உண்மையைத்தான் நாமும் இப் பத்திரிகையில் பல முறை வற்புறுத்தி வந்திருக்கிறோம். வசிஷ்டர் வாயால் பிரம்மரிஷி என்பதுபோல், வடநாட்டுத் தலைவர் சொன்னால்தான் உண்மை என்று நினைக்கிறவர்கள், டாக்டர் ஸையத் மூகம்மதுவின் வாக்கைச் சிந்திப்பார்களாக. சிந்தித்து, தென்னாட்டைக் குறித்துப் பெருமை கொள்வார்களாக.

# இந்திய தொழிற் சாலையின் ஒவ்வொரு துறையிலும் அஜாக்ஸ்





வேலைப்பாடு முக்கியம் எனக் கருதப்படும் ஒவ்வொரு தொழிற் சாலையிலும் அஜாக்ஸ் உயர்தர பட்டசீலைகள் தேவையாக இருக்கின்றன. மரம், உலோகம், தோல் தொழிற்சாலைகளில் அஜாக்ஸ் பட்டசீலைகளை அதிகமாய் உபயோகப்படுத்துகிறார்கள்.

பிலின்ட் (ஸான்ட்)
கார்னெட்
எமிரி
அஜாக்ஸைட் பேப்பர்
க்ளாத்
டிஸ்க்ஸ்
ரோல்ஸ்
பெல்ட்ஸ்
டேப்ஸ்
மற்றுமுள்ளவைகள்.

## அஜாக்ஸ்
### பிராடக்ட்ஸ் லிமிடெட்,
106, அரமனைக்காரத் தெரு,
சென்னை.

மானேஜிங் ஏஜண்டுகள் :
முருகப்பா & ஸன்ஸ்.

தென் இந்தியாவுக்கு விற்பனை ஏஜண்டுகள் :
பார்ஷல் ஸன்ஸ் & கோ.,
(இந்தியா) லிமிடெட்.
தபால் பெட்டி 141, சென்னை.

A. S. K, 8.




மலர் 4 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிட்டடி பாப்பா —பாரதியார் | இதழ் 44

# என்ன சேதி?

## பழைய குருடி

சமாதானத்தை நிலை நாட்டுவதற்காக எத்தனை யுத்தங்கள் வந்துவிட்டுப் போனபோதிலும், எத்தனை அட்லாண்டிக் சாஸனங்கள் தோன்றி மறைந்தபோதிலும், எத்தனை சர்வதேச மகாநாடுகள் கூடிக் கலைந்த போதிலும், எத்தனை நவ நவமான இயக்கங்கள் நடந்தபோதிலும் இந்த உலகமாகிய மூதாட்டி 'பழைய குருடி'யாகவே இருப்பாள் என்றும், தன் போக்கிலேயே போவாள் என்றும் தோன்றுகிறது. மண்ணாசையும் அதன் விளைவான சண்டை சச்சரவுகளும் ஏற்பட்டுக் கொண்டுதானிருக்கும் என்று காணப்படுகிறது. சண்டை சச்சரவுகளுக்குக் காரணமாக மண்ணாசையோடு [illegible] ஆசையும் ஒரு வேளை சேர்ந்து கொள்ளலாமே தவிர, மற்றப்படி உலகம் பழைய உலகமாகவேதான் இருந்து வருமோ என்று ஐயுறுவதற்குச் சென்ற வாரத்தில் ஒரு காரணம் ஏற்பட்டது. ஸிரியா—லெபானன் சம்பவத்தைத்தான் சொல்கிறோம்.

## டிகாலேக்கு ஒரு அடி!

சமய சந்தர்ப்பம் பார்த்துப் பிரான்ஸுக்குள் புகுந்து, தேர்தல் நடத்திப் பெருமித வெற்றி பெற்று, ஏறக்குறைய பிரான்ஸின் சர்வாதிகாரி ஸ்தானத்தை அடைந்த டிகாலேக்கு நாளுக்கு நாள் ஏகாதிபத்திய வெறி தலைக்கேறி வந்ததைக் கண்டோம். அந்த வெறியானது சென்ற வாரத்தில் ஸிரியாவில் தன்னுடைய கோரஸ்வரூபத்தைக் காட்டிற்று. அதன் பலனாக டிகாலே தலையில் ஒரு அடி விழுந்தது.

யுத்தத்தில் பிரான்ஸ் தோற்றிருந்த சமயத்தில் ஸிரியா—லெபானன் பிரஜைகள் பிரெஞ்சுப் பிடிப்பிலிருந்து விடுதலையடைய ஒரு பெரு முயற்சி செய்தார்கள். அதில் வெற்றியும் பெற்றார்கள். தேசக் கட்சியார் ஆயிக்க ஆரம்பித்திருந்த சமயத்தில் பிரெஞ்சுக்காரர் மறுபடியும் ஸிரியாவைக் கட்டுக்குள் கொண்டு வரப் பார்த்தார்கள். அப்போது லெபானனின் பிரஜைகள் 'லபோ லபோ' என்று அடித்துக் கொண்டு பிரெஞ்சு முயற்சியைத் தோற்கடித்தார்கள்.

இப்போது மீண்டும் நல்ல வேளை பார்த்து டிகாலே ஸிரியாவை பிரெஞ்சு சாம்ராஜ்யச் சிறையில் போட்டுவிடப் பார்த்தார். ஸிரியாவில் ஏற்கனவே இருந்த பிரெஞ்சுத் துருப்புகளுக்குப் பக்க பலமாகப் புதிய துருப்புகளைக் கொண்டு இறக்கினார். எனவே, மீண்டும் ஸிரியா — லெபானனில் பெருங் கூக்குரல் எழுந்தது. கலகமும் உண்டாயிற்று. டிகாலே அடியுண்டு பின்வாங்கினார். ஸிரியா மக்கள் சுதந்திரக் கொடி தூக்கினார்கள். இப்போது தங்கள் நகரிலுள்ள வீதிகளில் பிரெஞ்சுப் பெயர்களையெல்லாம் அழித்து வருகிறார்கள். பிரான்ஸ் தேசம், பிரெஞ்சு பாஷை, பிரெஞ்சு மக்கள்—எல்லாரையும் தாங்கள் அடிவயிற்றிலிருந்து வெறுப்பதாக ஸிரியர்கள் இப்போது சொல்கிறார்கள்.

சமய சந்தர்ப்பம் அறிந்து தங்களுடைய சக்தியைத் தக்கபடி பயன்படுத்தி வெற்றி பெற்ற ஸிரியாவின் மக்களை நாம் மனமார வாழ்த்துகிறோம்.

## சர்ச்சில் - சுதந்திர வீரர்!

மேற்படி ஸிரியா—பிரெஞ்சுத் தகராறில் ஒரு பெரிய விசேஷம் என்னவென்றால், சர்ச்சில் பெரிய சுதந்திர வீரராக உலகத்தின் முன்னிலையில் பெயர் வாங்கிக் கொண்டதுதான்! ஜான்புல் உலகமெங்கும் எத்தனையோ தேசங்களின் சுதந்திரத்தைப் பறித்து அந்தந்த தேசங்களின் தலையில் அழுத்தமாய் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். இந்த மாபெரும் யுத்தத்திலே கூட அவனை அந்தந்த இடத்திலிருந்து ஒரு அங்குலமாவது அப்புறப்படுத்த முடியவில்லை!

ஆனால், ஜான்புல்லின் அதிர்ஷ்டத்தைப் பாருங்கள்! அவன் பக்கத்தில் அதிர்ஷ்டம் இருப்பதனாலேயே மற்றவர்களுடைய புத்தி மழுங்கி அசட்டுத்தனமான காரியங்களைச் செய்கிறார்கள். ஸிரியாவில் டிகால் அத்தகைய அசட்டுக் காரியத்தைச் செய்யப் போக, ஸிரிய மக்கள் கூகூ என்று கூச்சலிட, சர்ச்சில் இந்தச் சச்சரவில் தலையிட்டு, டிகாலை அதட்டி நிறுத்தி, ஸிரிய மக்களின் சுதந்திரத்தைத் தாங்கிப் பேசி, "உலகில் ஜனர்களின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்குச் சர்ச்சிலைத் தவிர வேறு யார்?" என்ற பெயரை வாங்கிக் கொண்டார். ஸிரியர்களை பிரிட்டிஷார்தான் பிரஞ்சுக்காரர்களுக்கு விரோதமாகத் தூண்டி விட்டதாக என்னதான் டிகாலே குற்றம் சுமத்தினாலும், ஸிரியாவில் பிரான்சுக்கு என்ன வேலை என்று அவரால் சொல்ல முடியவில்லை. ஸிரியர்கள் பிரஞ்சுக்காரர்களை வெறுத்து பிரிட்டிஷாரை உதவிக்கு அழைத்ததையும் அவரால் மறுக்க முடியவில்லை! — எல்லாவற்றிற்கும் காரணம், ஜான்புல்லின் யோக ஜாதகந்தான்!

**எச்சரிக்கை!**

ஆனபோதிலும், ஸிரிய மக்கள் ஒரு விஷயத்தில் எச்சரிக்கையாயிருக்க வேண்டியது அவசியமாகும். இந்தியா தேசத்திலேயும் ஒரு சமயம் இப்படித்தான் பிரஞ்சுக்காரர்களுக்கும் பிரிட்டிஷ்காரர்களுக்கும் தகராறுகள் நடந்தன. கடைசியில் பிரஞ்சுக்காரர்களை பிரிட்டிஷார் தோற்கடித்துத் துரத்திவிட்டு, அவர்கள் விட்டுப்போன இடங்களோடு மற்ற இடங்களையும் சேர்த்துத் தாங்கள் அழுத்தமாக உட்கார்ந்து கொண்டார்கள். இன்னமும் நகர மாட்டோம் என்கிறார்கள். இந்தியாவில் நடந்தது ஸிரியாவில் நடக்காதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

சென்ற வருஷத்தில் இதே பத்திரியில், "யுத்தத்தில் வெற்றி யார் அடைவார்கள்? பிரிட்டனா, ருஷியாவா, அமெரிக்காவா?" என்று விவாதித்த போது, "யுத்தத்தில் வெற்றியடைவது யாராயிருந்தாலும், யுத்தத்தினால் லாபம் அடையப்போவது மட்டும் பிரிட்டன் தான்! யுத்தம் முடிந்த பிறகு உலகத்தில் இன்னும் சில புதிய பகுதிகள் சிவப்பு வர்ணம் தீட்டப்பெற்று விளங்கும்!" என்று எழுதியிருந்தோம். இந்த நம் கூற்றை மெய்ப்படுத்துவதற்காக ஸிரியா பிரிட்டனின் கீழ் நிரந்தரமாக வந்து விடுவதை நாம் விரும்பவில்லை. அப்புறம் கடவுள் இருக்கிறார்!

## சர்ச்சிலும் டிகாலும்



"பிரிட்டன் தன் மனம் போன விதமாக இந்தியாவிலுள்ள தேசபக்தர்களைக் கைது செய்யலாமா?"
"பேஷாகச் செய்யலாம்"




"காலவரையறையில்லாமல் அவர்களைப் பிரிட்டன் 'லாக்'கப்பில் வைத்திருக்கலாமா?"
"பேஷாக வைத்திருக்கலாம்"




"நிராயுதபாணிகளான மக்களின்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யலாமா?"
"சிலசமயம் செய்யலாம்"

-உம்மன்



"இந்தியாவின் எல்லைப்புற மக்கள்மீது விமானங்களிலிருந்து குண்டுபோட்டது நியாயமா?"
அநாகரீக மக்களை வேறென்ன செய்வது.




"இதை யெல்லாம் கேட்க நீர் யார்?"
"காலனி பிரஜைகள் மீது எப்பொழுதுமே பிரிட்டன் குதிரை சவாரி செய்யலாமா?"




"நானும் அப்படித்தான் செய்வேன். கேட்பதற்கு நீ யார்?" - என்று கேட்கிறார் டிகாலே.

# திரும்பி வந்தார்!

போன வேவல் திரும்பி வந்தார்! க்ஷேமமாகத் திரும்பி வந்தார்! வழியில் பிரயாணத்தில் யாதொரு அபாயமும் ஏற்படவில்லை! இங்கிலாந்தில் சர்ச்சிலுடன் நடத்திய யுத்தத்தில் — இந்தியாவின் விடுதலைக்காக அமெரியுடன் நடத்திய பற்போரில் — காயம் கீயம் எதுவும் ஏற்படாமலும் அங்கஹீனம் ஆகாமலும் போன மாதிரியே முழுமையாகத் திரும்பி வந்தார்.

வேவல் நன்றாயிருக்கட்டும்! க்ஷேமமாயிருக்கட்டும்! நீடூழி காலம் தீர்க்காயுளுடன் வாழட்டும்!

* * *

வேவல் கொண்டு வந்திருப்பது என்ன என்பது இன்னும் மூடு மந்திரமாக இருக்கிறது. அதைத் தமது மந்திரிகளாகிய நிர்வாக சபை அங்கத்தினருக்கு மட்டும் வைஸ்ராய் வேவல் தெரிவித்திருக்கிறாராம். அதைப் பற்றி அவர்கள் தீவிரமாக ஆலோசனை செய்து வருகிறார்களாம். ஆலோசித்து ஆலோசித்து அவர்களுடைய மூளை குழம்பிய பிறகு, வருகிற 12உ அல்லது 13உ வாக்கில் வேவல் கொண்டு வந்த திட்டம் என்ன என்பது வெளியிடப்படுமாம்! அதே சமயத்தில் இங்கிலாந்தில் அமெரியும் அதை வெளிப்படுத்துவாராம்!

திட்டம் வெளியாகிற போது ஆகட்டும். ஆயினும் அந்தத் திட்டத்தைப் பற்றி ஒரு மாதத்திற்கு முன்பே — அதாவது லண்டனில் சர்ச்சிலுக்கும் வேவலுக்கும் குஸ்தி நடப்பதாகச் செய்திகள் வந்து கொண்டிருந்த காலத்திலேயே நம் — கூறிய ஜோசியத்தை ஞாபகப்படுத்த விரும்புகிறோம்:

1942-ல் கிரிப்ஸ் கொண்டு வந்த திட்டத்தைக் காட்டிலும் 1945-ல் வேவல் கொண்டு வரும் திட்டம் மட்டமானதாயிருக்கும். கிரிப்ஸ் திட்டத்தின்படி இந்தியாவுக்கு அளிக்கப்படவிருந்த உரிமைகள் வேவல் திட்டத்தின்படியும் கிடைக்குமானால், ஏதோ ஒரு மகத்தான அதிசயம் நடந்து விட்டது என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும். கிரிப்ஸ் திட்டத்தைக் காட்டிலும் அதிக உரிமையை வேவல் திட்டம் ஒரு நாளும் கொடுக்காது.

இதைப்பற்றி நமக்கு யாதொரு சந்தேகமும் எப்பொழுதும் இருந்ததில்லை. சந்தேகம் உள்ளவர்கள் தயவுசெய்து அடுத்த வாரம் வரையில் பொறுத்திருந்து பார்க்கக் கோருகிறோம்.

* * *

சரி; கிரிப்ஸ் திட்டத்தைக் காட்டிலும் குறைவானதாகத்தான் வேவல் திட்டம் இருக்குமென்றால், அதை நாம் என்ன செய்வது? கிரிப்ஸ் திட்டத்தையே வேண்டாமென்று தள்ளியவர்கள், வேவல் திட்டத்தையும் கண்ணை மூடிக்கொண்டு நிராகரிக்க வேண்டியதுதானே? அதை நாம் கண்ணெடுத்தும் பார்க்கலாமா?

பழைய தவறுக்குப் பரிகாரம் மறுபடியும் ஒரு தவறு செய்வதுதான் என்றால், வேவல் திட்டத்தையும் நிராகரிக்க வேண்டியதுதான். நிராகரித்து விட்டு, பழையபடியே அன்னிய அதிகாரவர்க்க ஆட்சியில் அடிமைகளாக இருந்து கொண்டு, லட்சக்கணக்கான ஜனங்கள் பட்டினியால் சாகப் பார்த்துக்கொண்டு, கோடி கோடியான பணம் நாட்டை விட்டுப் போகப் பார்த்துக்கொண்டு, என்றைக்காவது ஒருநாள் சுயராஜ்யம் நம் வாயில் வந்து விழும் என்று ஆகாசத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டு இருக்கவேண்டியதுதான்.

இல்லை, பழைய தவறுக்கு உண்மையான பரிகாரம் தேடவேண்டும், பொது மக்களின் துன்பங்களைப் போக்க வழி தேடவேண்டும், அடிமை வாழ்வு அகல உபாயம் தேடவேண்டும் என்று கருதினால், வேவல் திட்டம் எதுவாயிருந்தாலும் அதைத் தக்சமயம் விடாமல் கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்று நாம் கருதுகிறோம்.

இதே விஷயத்தைப் பூனாவில் ராஜாஜி சொன்னதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்திருந்ததை நேயர்கள் அறிவார்கள்.

"அடடா? இதென்ன? வேவல் எதைக் கொண்டு வந்தாலும் ஒத்துக் கொள்வதாமே? ராஜாஜி இவ்வளவு கீழே இறங்கி விட்டாரா?" என்று பலர் வருத்தப்பட்டதையும் நேயர்கள் அறிவார்கள்.

இதைப் பற்றி ராஜாஜி தூத்துக்குடி பிரசங்கத்தில் விளக்கம் செய்திருக்கிறார்.

"வேவல் திட்டம் மட்டமாய்த்தான் இருக்கும். ஆனாலும் அதைப் பெற்றுக் கொள்ளலாமென்று நான் சொல்கிறேன். பெற்றுக் கொள்வது என்றால், ஒப்புக்கொள்வது அல்ல; ஒத்துக் கொள்வதும் அல்ல."

இவ்விதம் ராஜாஜி கூறி, விஷயம் இன்னும் விளக்கமாவதற்கு வழக்கம் போல் உதாரணமும் சொன்னார்.

நம்முடைய மாட்டில் பத்து மாட்டை ஒருவன் அபகரித்து விடுகிறான். பத்து மாட்டையும் திருப்பிக் கொடுக்கும்படி நாம் போராடுகிறோம். அவன் இரண்டு மாட்டைத் திருப்பிக் கொடுக்க வருகிறான். இரண்டு மாடு வேண்டாமென்று நாம் ஏன் சொல்ல வேண்டும்? இரண்டு மாட்டையும் பெற்றுக் கொண்டு, பாக்கி மாடுகளுக்கும் சண்டை போடலாமல்லவா?

அந்த இரண்டு மாடும் பசுக்களாயிருந்தால், அந்தப் பசுக்களின் பாலைக் குடித்து இன்னும் பலம் பெற்றுப் போராடலாமல்லவா? அல்லது வீட்டில் பட்டினி கிடந்து சாகும் குழந்தைகளை அந்த இரண்டு மாட்டின் பாலைக் கொண்டு காப்பாற்றலாமல்லவா?

இவ்வளவுதானே ஒழிய, வேவல் திட்டத்தைப் பெற்றுக் கொள்வது என்றால், "நம்முடைய உரிமை இவ்வளவுதான்; இதுவே போதும்!" என்று ஒத்துக்கொள்வது ஆகாது. கிடைப்பதைப் பெற்றுக் கொண்டு அந்த பலத்தைக் கொண்டு மேலும் போராடிப் பூரண சுதந்திரத்தைப் பெற வேண்டுமென்பதுதான் ராஜாஜியின் நோக்கம்.

"பெற்றுக் கொள்வது" என்பது கூடக் கௌரவக் குறைவாகத் தோன்றினால், "பற்றிக் கொள்வது" என்று சொல்வோம். நம்முடைய உரிமையை, நம்முடைய சொத்தை, கிடைத்த வரையில் கைப்பற்றிக் கொள்வதில் எவ்விதக் கௌரவக் குறைவும் கிடையாது. இதற்கு எத்தனையோ சுதந்திர தேசங்களின் உதாரணங்கள் சரித்திரத்தில் காணக் கிடக்கின்றன. நம் கண் முன்னாலும் இருக்கின்றன.

* * *

"ஆனால் நமது தலைவர்கள் சிறையில் இருக்கும்போது நாம் பதவி ஏற்பதா? இது அவர்களுக்கு நாம் செய்யும் துரோகம் அல்லவா?" என்ற கேள்வி ஒன்று கேட்கப் படுகின்றது.

அரசியல் உலகத்தில் வைத்தியக்காரக் கேள்விகளுக்கு எல்லையே கிடையாது என்று இதிலிருந்து ஏற்படுகிறது.

பண்டித ஜவாஹர்லால்ஜியையும், ஸ்ரீ ராஜேந்திர பிரஸாதையும், மௌலானா ஆஸாதையும் சிறையில் வைத்து விட்டு, ஸ்ரீ புலாபாய் தேஸாயோ ராஜாஜியோ பதவி ஏற்பார்கள் என்பது நினைக்கக்கூடிய காரியமா? ஒருநாளும் இல்லை.

அரசியல் சமரசம் ஏற்படுவது என்றால், அதில் முதல் காரியம் சிறையிலுள்ள தலைவர்களை விடுதலை செய்வதேயாகும். இது விஷயத்தில் என்ன சந்தேகம் இருக்க முடியும்?

அபிப்பிராய பேதம் எல்லாம் எதிலே என்றால், தலைவர்களின் விடுதலையைச் சாதிப்பதற்கு அனுசரிக்க வேண்டிய முறை என்ன என்பதிலேயாகும்.

அரசியல் சமரசத்துக்கு இணங்குவதாகக் காட்டிக்கொண்டு, "ஆகட்டும்; உங்கள் திட்டத்தை இப்போதைக்கு அங்கீகரிக்கிறோம்; முதலில், எங்கள் தலைவர்களை விடுதலை செய்யுங்கள்!" என்று சொன்னால் கேட்பார்கள். தலைவர்களும் விடுதலையடைவார்கள். அப்புறம் அவர்களுடைய யோசனைகளைக் கேட்டே எந்தக் காரியமும் செய்வதில் தடை எதுவும் இராது.

அப்படிக்கின்றி "வேவல் திட்டம் வெறும் குப்பை; அதை ஒத்துக் கொள்ளவே முடியாது; பூரண சுதந்திரத்துக்கு இம்மி குறைந்தாலும் பெற்றுக்கொள்ள மாட்டோம்" என்று சொல்லிக் கொண்டிருந்தால், தலைவர்களும் இருந்த இடத்திலேயே இருப்பார்கள்; தேசமும் இருந்த இடத்திலேயேதான் இருந்து கொண்டிருக்கும்.

வேவல் திட்டத்தைப் பெற்றுக் கொள்வதற்கோ, பற்றிக் கொள்வதற்கோ தேசத்தில் சாதகமாக அபிப்பிராயம் இருக்கிறது என்று தெரிந்தால்தான் நமது தலைவர்கள் சிறையிலிருந்து விடுதலையடையக் கூடும். "ஆ! அவர்கள் அப்படிப் பட்ட விடுதலையை விரும்ப வில்லை; சிறையிலிருந்து சாகவே விரும்புகிறார்கள்!" என்று சொல்கிறவர்கள் விஷயத்தில் நம்முடைய வாதம் ஒன்றும் பயன் படாது என்பதை நாம் அறிவோம். அப்படிப் பட்டவர்களுடன் வாதம் செய்யவும் நாம் தயாராயில்லை. நம் தலைவர்கள் சிறையிலிருந்து உயிரோடு வெளி வர வேண்டும் என்ற எண்ணமுடையவர்களுக்குத்தான் நாம் இதையெல்லாம் சொல்கிறோம்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: வி. கிருஷ்ணன், ஷண்முகரெங்கபுரம் போஸ்டு, வள்ளியூர் வழி.

# வந்தனம்!

"வெற்றிகரமாக நிறைவேறியது என்று சொல்கிறோமே, அது என்னவென்று கேட்டால், இன்றைக்கு நடந்த வைபவம்தான்!" என்று ராஜாஜி எட்டயபுர அஸ்திவாரத் திருவிழா நடந்து முடிந்ததும் கூறினார். ராஜாஜி எந்த விஷயத்தைப் பற்றியும் அவ்வளவு உற்சாகமாகப் பாராட்டியோ, அளவுமீறிப் புகழ்ந்தோ சொல்லக் கூடியவர் அல்ல என்பது யாவரும் அறிந்ததே. அத்தகையவர் மேற்கண்டவாறு சொல்ல வேண்டுமென்றால், எட்டயபுரம் திருவிழா எவ்வளவு நன்றாக நடந்திருக்க வேண்டும், எவ்வளவு சிறப்பாகவும் விமரிசையாகவும் நடந்திருக்க வேண்டும் என்று சொல்ல வேண்டியதில்லை. இதுவரையில் தமிழ் நாட்டில் இலக்கிய சம்பந்தமான இத்தகைய மகத்தான உற்சவம் ஒன்று நடந்தது கிடையாது என்று சொன்னால், சிறிதும் மிகையாகாது.

* * *

"கடவுள் உண்டா?" "ஆன்மா என்பது உண்டா?" என்பது போன்ற கேள்விகள் ஆதிகாலத்திலிருந்து கேட்கப்பட்டு வந்திருக்கின்றன; விவாதிக்கப்பட்டு வந்திருக்கின்றன. இன்னமும் முடிவின்றி விவாதித்துக் கொண்டுதான் வருகிறார்கள்.

மனிதனுடைய புலன்களுக்கும் அறிவுக்கும் எட்டாத சக்தி எதுவும் கிடையாது என்று சாதிக்கிறவர்கள் இன்னமும் இருக்கத்தான் இருக்கிறார்கள்.

என்னுடைய சொந்த அநுபவத்தில், மனிதனுடைய புலன்களுக்கும் அறிவுக்கும் எட்டாத சக்தி ஒன்று இருப்பதாக நான் உணர்ந்திருக்கிறேன். அத்தகைய சக்தியானது வெறும் குருட்டுத்தனமான சக்தியல்ல; ஏதோ ஒரு ஒழுங்கின்படி, ஒரு நியதியின்படி, இந்த உலகத்தையும் இதில் நடைபெறும் சகல காரியங்களையும் நடத்தி வருகிறது என்றும் நான் நம்புகிறேன்.

அந்த சக்தியானது தற்சமயம் தமிழ் நாட்டை ஒரு மகோந்நதமான நிலைமைக்குக் கொண்டு போகும் மார்க்கத்தில் நடத்திக் கொண்டு வருகிறது என்று நான் பரிபூரணமாய் நம்புகிறேன். பாரதியார் பாடிப் பரவியுள்ள பராசக்தி அதுதான் போலும்!

அந்த மகா சக்தியின் காரணமாகத்தான் எட்டயபுரத்தில் நாம் கண்ட அற்புதம் நிகழ்ந்தது என்று எனக்குத் தோன்றுகிறது. மற்றப்படி மனிதப் பிரயத்தனத்தினால் மட்டும் அவ்வளவு மகத்தான ஒரு வைபவம் நடந்திருக்கக் கூடும் என்று என்னால் நம்ப முடியவில்லை.

* * *

புலன்களுக்கும் அறிவுக்கும் அதீதமான ஒரு சக்தியின் மகிமையினாலேயே எட்டயபுரம் அஸ்திவாரத் திருவிழா நடந்தது என்று நான் நம்பிய போதிலும், அந்த சக்தி யார் யார் மூலமாக வேலை செய்தது என்பதை மறந்து விடவில்லை. ஒரு நாளும் மறக்கவும் முடியாது.

பல பேரின் மூலமாகப் பராசக்தியின் அருள் இயங்கியிருக்கிறது. பலருடைய ஒத்தாசையின் மூலமாகவும், உற்சாகமான ஒத்துழைப்பின் மூலமாகவுந்தான் தமிழ் நாட்டில் முதன் முதலாக இந்தத் தனிப் பெரும் இலக்கிய விழா நடந்தேறியது.

இதற்கு உதவி செய்தவர்களைப் பற்றி நினைக்கும்போது, முதன் முதலில் என்னுடைய சகோதரப் பத்திரிகாசிரியர்கள், எழுத்தாளர்கள் இவர்களுடைய உதவிதான் முன்னால் நினைவுக்கு வருகிறது.

பல சமயங்களில் என்னுடைய சகோதரப் பத்திரிகாசிரியர்களுடனும் எழுத்தாளர்களுடனும் மாறுபட்ட அபிப்பிராயங்களை நான் தெரிவிக்க வேண்டியிருந்ததுண்டு. காரசாரமான விவாதங்கள் பல எங்களுக்குள் நிகழ்ந்திருக்கின்றன. அரசியலிலும் கலைத் துறையிலும் மற்றவர்களின் அபிப்பிராயத்துக்கு மாறுபட்ட அபிப்பிராயங்களைப் பல சமயம் நான் வற்புறுத்திச் சொல்ல வேண்டியதாயிருந்திருக்கிறது.

மேற்கூறிய வாதப் பிரதிவாதங்கள், அபிப்பிராய பேதங்கள் முதலியவற்றை இந்த அரும் பெரும் காரியத்துக்குத் தடையாக வைத்துக் கொள்ளாமல் தமிழ் நாட்டுப் பத்திரிகாசிரியர்கள், எழுத்தாளர்கள் அனைவரும் ஒருமுகமாக எட்டயபுரம் ஞாபகச் சின்ன முயற்சியை ஆதரித்தார்கள்.

எட்டயபுரம் ஞாபகச் சின்ன யோசனை வெளியான மறு வாரத்திலேயே கோயமுத்-

ரில் ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம் அவர்களின் தலைமையில் எழுத்தாளர் மகாநாடு கூடிற்று. அந்த மகாநாடு மேற்படி முயற்சியைப் பரிபூரணமாக ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றியது.

அதற்குப் பிறகு தமிழ் நாட்டிலுள்ள சகல பத்திரிகைகளும், — தினசரிகள், வாரப் பத்திரிகைகள், மாதப் பத்திரிகைகள், மாத மிருமுறைப் பத்திரிகைகள் எல்லாம்— எட்டயபுரம் ஞாபகார்த்த முயற்சியைத் தொடர்ந்து ஆதரித்து வந்தன. அஸ்திவார விழாவைப் பற்றிய செய்திகளுக்கும் முக்கியம் கொடுத்துப் பிரசுரித்தன.

இவ்விதம் ஒத்துழைத்து உதவி செய்த பத்திரிகாசிரியர்களுக்கும் எழுத்தாளருக்கும் என் மனமார்ந்த வந்தனங்களை முதன் முதலில் தெரிவிக்க வேண்டும் என்றுதான் இதை எழுத ஆரம்பித்தேன்.

ஆனால், இவ்வளவு எழுதிய பிறகு, வந்தனம் எதற்காகச் செலுத்த வேண்டும் என்று ஐயம் உண்டாகிறது.

அவர்களுடைய வேலையை, அவர்கள் எல்லாருடைய சார்பாகவும் நான் நடத்தி வருகிறேனே தவிர வேறில்லை.

ஸ்ரீ வி. ஆர். சீனிவாசன் அவர்களைப் போன்ற பத்திரிகாசிரியர்களும், ஸ்ரீ வ. ரா. போன்ற எழுத்தாளர்களும், மற்றும் பல தமிழன்பர்களும் பல காலமாகச் செய்து வந்த இடைவிடாத பாரதி பிரசாரத்தின் பலனாகத்தான் இப்போது எட்டயபுரம் ஞாபகச் சின்னம் ஏற்படுகின்றது.

அவர்களுடைய பிரதிநிதியாக நான் ஏற்றுக் கொண்டு செய்யும் காரியத்துக்கு உதவி செய்வதன் பொருட்டு அவர்களுக்கு நான் எதற்காக வந்தனம் செலுத்த வேண்டும்?

எனவே, வந்தனம் செலுத்துவதற்குப் பதிலாக அவர்களுக்கு ஒரு வேண்டுகோளுடன் இதை முடிக்கிறேன்.

ஞாபகச் சின்னக் கட்டிடத்துக்கு அஸ்திவார விழா மட்டுந்தான் இப்போது நடந்தேறியிருக்கிறது.

கட்டிடம் முழுதும் கட்டித் தமிழ் மக்களிடம் ஒப்படைக்கப்படும் வரையில், இதுவரையில் அளித்து வந்த உதவியையும் ஒத்துழைப்பையும் தொடர்ந்து அளித்து வரும்படி எல்லாப் பத்திரிகாசிரியர்களையும் எழுத்தாளர்களையும் வேண்டிக் கொள்கிறேன்.

—கல்கி

# சிவகாமியின் சபதம்



கல்கி

## அத்தியாயம் 23

## அபயப் பிரதானம்

"சிவகாமி! நிஜமாக நீதானா? அல்லது என் கண்கள் என்னை ஏமாற்றுகின்றனவா?" என்று நாகநந்தியடிகள் கேட்டார்.

"அடிகளே! நான்தான்; அனாதை சிவகாமிதான்; ஏழை ஆயனச் சிற்பியின் மகள் சிவகாமிதான்; சுவாமி!..."

"ஆ! அப்படியெல்லாம் சொல்லாதே, அம்மா! நீயா அனாதை? நீயா ஏழை? பல்லவ சாம்ராஜ்யத்தின் குமார சக்கரவர்த்தி மாமல்லப் பிரபுவின் காதலுக்குரிய பாக்கியசாலியல்லவா நீ? மண்டலாதிபதியான மகேந்திர பல்லவரின் மருமகளாகப் போகிற சிவகாமியல்லவா நீ?......"

"சுவாமி! என்மேல் பழி தீர்த்துக் கொள்ள இது சமயமல்ல. உங்களைரொம்பவும் வேண்டிக் கொள்கிறேன்; காப்பாற்ற வேண்டும்!" என்று சிவகாமி அலறினாள்.

"பெண்ணே! காவித் துணி தரித்த ஏழைப் பரதேசி நான். என்னால் என்ன முடியும்?"

"உங்களால் முடியும், சுவாமி. உங்களால் முடியும்! நீங்கள் மனது வைத்தால் கட்டாயம் காப்பாற்ற முடியும்."

"என்னமோ, பார்க்கிறேன். ஆனால் உனக்கு என்ன அபாயம் இப்போது வந்திருக்கிறது? இவர்கள் யார், வாதாபி வீரர்கள்தானே? இவர்களிடம் நீ எப்படிச் சிக்கிக் கொண்டாய்? கோட்டைக்குள்ளிருந்து ஏன் வெளியே வந்தாய்? எப்படி வந்தாய்? அதுவும் தனியாக?........"

"அதையெல்லாம் இப்போது கேட்க வேண்டாம், சுவாமி! மூடத்தனத்தினால் வெளியே வந்தேன். என் அருமைத் தந்தைக்கு நானே யமனாக ஆனேன்!......அடிகளே! நான் எக்கேடாவது கெட்டுப் போகிறேன். என் தந்தையைக் காப்பாற்றுங்கள்...."

"உன் தந்தை எங்கே, அம்மா? அவருக்கு என்ன ஆபத்து வந்திருக்கிறது?"

"ஐயோ! இவர்களைக் கேளுங்கள். அப்பா எங்கே என்று இவர்களைக் கேளுங்கள்! சற்று முன்னால் ஏதோ பயங்கரமான வார்த்தை என் காதில் விழுந்தது. அதோ அந்தக் குதிரை மேல இருப்பவர் சொன்னார். அப்பா எங்கே என்று அவரைக் கேளுங்கள், சுவாமி! சீக்கிரம் கேளுங்கள்!"

இப்படிச் சிவகாமி சொல்லிக் கொண்டிருக்கும்போதே, சற்றுப் பின்னால் குதிரை மேல் வீற்றிருந்து, மேற்கூறிய காட்சியைக் கவனித்துக் கொண்டிருந்த தளபதி சசாங்கன் குதிரையைச் செலுத்திக் கொண்டு அவர்கள் அருகில் வந்து சேர்ந்தான்.

"புத்தம் கச்சாமி!" என்று நாகநந்தியைப் பார்த்துப் பரிகாசக் குரலில் கூறி வணங்கினான்.

வாதாபி சக்கரவர்த்தியிடம் நாகநந்தி பிக்ஷுவுக்கு இருந்த செல்வாக்கைக் குறித்துப் பொறாமை

சொல்கிறேன். இந்தப் பல்லவ நாட்டிலுள்ள சிற்பிகளை யெல்லாம் ஒரு காலையும் ஒரு கையையும் வெட்டிப் போடும்படி சக்கரவர்த்தியின் கட்டளை. இவளுடைய தந்தை பெரிய மகா சிற்பியல்லவா? அதற்காக அவருக்கு மரியாதை செய்யும் பொருட்டு இரண்டு காலையும் இரண்டு கையையும் வெட்டிப் போடச் சொல்லியிருக்கிறேன்! அதோ தெரியும் அந்தப் பாறைமேல் கொண்டுபோய் சுற்றுப் பக்கமெல்லாம் தெரியும்படியாகக் காலையும் கையையும் வெட்டிக் கீழே உருட்டிவிடச் சொல்லியிருக்கிறேன். காஞ்சிக் கோட்டை மதிளிலிருந்து பார்ப்பவர்களுக்குத் தெரிய வேண்டுமென்றுதான் பாறை உச்சிக்குக் கொண்டுபோய் வெட்டச் சொன்னேன்!" என்றான் சசாங்கன். இவ்விதம் சொல்லிவிட்டு, மீண்டும் அவன் பயங்கரமாகச் சிரித்தான்.

சசாங்கன் பேசுகிற வரையில் அவனுடைய முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த சிவகாமி அவன் பேசி முடித்ததும், சொல்ல முடியாத பயங்கரமும் வேதனையும் நிறைந்த கண்களினால் நாகநந்தியைப் பார்த்து, "அடிகளே!" என்று கதறினாள்.

அப்போது நாகநந்தி "பெண்ணே! என் வார்த்தையில் நம்பிக்கை வை! உன் தந்தையை நான் காப்பாற்றுகிறேன். மன நிம்மதியுடன் நீ இவர்களோடு போ!" என்றார்.

அப்போது சசாங்கன், "பிக்ஷு! வாதாபி சக்கரவர்த்தியின் கட்டளைக்குக் குறுக்கே நிற்பவருக்கு என்ன தண்டனை தெரியுமல்லவா? அது தங்களுக்கு ஞாபகம் இருக்கட்டும்!" என்று கூறிவிட்டு, சிவகாமியைப் பார்த்து, "பெண்ணே! இந்தப் பிக்ஷு உனக்குச் சொன்ன புத்திமதி நல்ல புத்திமதிதான். அதன் பிரகாரம், தடை ஒன்றும் சொல்லாமல் எங்களுடன் வந்து விடு!" என்றான்.

## அத்தியாயம் 24

# அட்டூழியம்

ஆயனரின் உள்ளம் சிந்தனா சக்தியை அடியோடு இழந்திருந்தது. தம் கண்ணால் பார்த்தது, காதால் கேட்டது ஒன்றையுமே அவரால் நம்ப முடியவில்லை. இதெல்லாம் கனவிலே நடக்கும் நிகழ்ச்சிகளா, உண்மையில் நடக்கும் சம்பவங்களா என்பதையும் அவரால் நிர்ணயிக்கக் கூட வில்லை.

உலகத்தில் மாநிலத்தை ஆளும் மன்னர்கள் யுத்தம் செய்வது சகஜந்தான். அதில் நம்ப முடியாதது ஒன்றுமில்லை. அப்படி யுத்தம் செய்யும் அரசர்கள் தங்கள் போருக்கு அனுப்பும் வீரர்களுக்கு, "ஸ்திரீகளையும், குழந்தைகளையும், வயோதிகர்களையும், பசுக்களையும், புலவர்களையும், கலைஞர்களையும் இம்சிக்கக் கூடாது!" என்று கட்டளை யிடுவதுண்டு. அரசர்கள் பொல்லாத மூர்க்கர்களாயும் கருணையற்றவர்களாயுமிருந்தால், அவ்வளவு தூரம் சிரத்தை எடுத்து முன் ஜாக்கிரதையுடன் கட்டளை யிட மாட்டார்கள்.

ஆனால், சாம்ராஜ்யம் ஆளும் சக்கரவர்த்தி ஒருவர் தமது படை வீரர்களுக்கு "சிற்பிகளை யெல்லாம் காலையும் கையையும் வெட்டிப் போட்டு விடு!" என்று ஆக்ஞை இடுவது நடக்கக்கூடிய சம்பவமா? அந்த மாதிரி கட்டளை யிடக்கூடிய ராட்சஸர்கள் இராஜ்யமாளும் சிம்மாசனத்தில் ஏறி வீற்றிருக்க முடியுமா? அந்த நாட்டின் பிரஜைகள் அதைப் பொறுத்துக் கொண்டிருப்பார்களா?

அதிலும், புலிகேசி சக்கரவர்த்தியா அப்படிப்பட்ட கட்டளை பிறப்பித்திருப்பார்? எவருடைய இராஜ்யத்தில உலகத்திலேயே இல்லாத கலை அதிசயங்கள் — என்றும் அழியாத வர்ணங்களில் தீட்டப்பட்ட அற்புத ஜீவ சித்திரங்கள் — உள்ளனவோ, அந்த இராஜ்யத்தின் மன்னரா அப்படிப்பட்ட கொடூரமான கட்டளையை

இட்டிருப்பார்? — அப்படி அவர் கட்டளையிட்டிருப்பதாய் அந்தக் குரூர முகம் படைத்த தளபதி கூறியது உண்மையாயிருக்க முடியுமா? அவன் சொன்னதாகத் தம் காதில் விழுந்தது நிஜந்தானா?

அவனுடைய கொடூர மொழிகளைக் கேட்டுச் சிவகாமி உணர்விழந்து தரையில் விழுந்தது உண்மையா? அவளைத் தாங்கிக் கொள்ளத் தாம் ஓடியபோது வாதாபி வீரர்கள் தங்களுடைய இரும்புக் கரங்களினால் தம்மைப் பிடித்துக் கொண்டதும் உண்மையாக நடந்ததுதானா? ...... அப்புறம் அந்தப் படைத் தலைவன் இட்ட கட்டளை பொய்தானா? "அதோ அந்தப் பாறை முனைக்கு அழைத்துப் போய்க் கோட்டையிலுள்ளவர்களுக்குத் தெரியும்படி காலையும் கையையும் வெட்டிக் கீழே உருட்டி விடுங்கள்!" என்ற மொழிகள் தாம் உண்மையாகக் கேட்டவைதானா?

அல்லது இவ்வளவும் ஒரு பயங்கரக் கனவில் நடக்கும் சம்பவங்களா?

இதோ இப்போது இந்தப் பாறை மீது தாம் ஏறுவதும், தம் கால்களைத் தள்ளாடுவதும் நிஜமா? அல்லது வெறும் சித்தப் பிரமையா?



ஆம்; இவையெல்லாம் வெறும் பிரமைதான்; அல்லது கனவுதான். உண்மையாக இருக்க முடியாது.

ஆனால், அதோ தெரிகிறதே, காஞ்சிக் கோட்டை. அது கூடவா சித்தப் பிரமையில் தோன்றும் காட்சி?

இல்லை. இல்லை; காஞ்சிக் கோட்டை நிஜந்தான். தம்மைப் பாறை மூலையில் கொண்டு வந்து நிறுத்தியிருப்பதும் நிஜந்தான். இதோ இந்த ராட்சதர்கள் தம் கைகளைப் பிடித்துக் கொண்டிருப்பதும், கைகளை வெட்டுவதற்காகக் கத்தியை ஓங்குவதும் நிச்சயமாக நடக்கும் சம்பவங்கள்தான்.

ஆ! சிவகாமி! என் அருமை மகளே! இந்தப் பாவி உன்னை என்ன கதிக்கு உள்ளாக்கிவிட்டேன்? என் அஜந்தா வர்ணப் பைத்தியத்துக்கு உன்னைப் பலி கொடுத்து விட்டேனே! ஐயோ! என் மகளே! மகளே! ****

வீரர்களில் ஒருவன் கத்தியை ஓங்கியபோது ஆயனர் தம் கண்களை இறுக மூடிக் கொண்டார். ஆனால் ஓங்கிய கத்தி அவர் எதிர்பார்த்தபடி அடுத்த கணம் அவருடைய கையை வெட்டவில்லை. "நிறுத்து!" என்று அதிகாரக் குரலில் ஒரு ஒலி கேட்டது. ஆயனர் கண்ணைத் திறந்து பார்த்தபோது.... ஆஹா! இதென்ன? புலிகேசி சக்கரவர்த்தியல்லவா இவர்? இங்கு எப்படி வந்து சேர்ந்தார்! — ஆஹா!

சக்கரவர்த்தியைப் பார்த்த வியப்பினால் ஆயனரைப் பிடித்துக் கொண்டிருந்த வீரர்கள் திடீரென்று கைப் பிடியை விட்டார்கள். விடுதலையடைந்த ஆயனர் வாதாபி சக்கரவர்த்திக்குத் தமது நன்றியைத் தெரிவித்துக் கொள்வதற்காகப் பாய்ந்தார். பாய்ந்தவருடைய கால் பக்கத்திலிருந்த பள்ளத்தில் நழுவிற்று. கீழே பூமி வரையில் சென்ற அந்த மலைச் சரிவில் ஆயனர் உருண்டு உருண்டு உருண்டு போய்க் கொண்டிருந்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் உணர்விழந்தார்.

• • •

மீண்டும் ஆயனருக்குத் தம் சுய உணர்வு வந்தபோது, ஏதோ பெருங் கலவரம் நடப்பதாகத் தோன்றியது. பல மனிதர்களின் கூச்சல் சத்தமும் கற்கள் ஒன்றோடொன்று மோதும் சத்தமும் கலந்து கேட்டது. முன் கேட்ட அதே அதிகாரக் குரலில் "நிறுத்து!" என்ற கட்டளையும் எழுந்தது.

ஆயனர் கண்களைத் திறந்து பார்த்தார். அரண்ய மத்தியில் இருந்த தமது பழைய சிற்பக் கிரஹத்துக்குள் தாம் இருப்பதைக் கண்டார். சுற்றுமுற்றும் பார்த்தார். வாதாபி சக்கரவர்த்தி கம்பீரமாய் நின்று கையினால் "வெளியே போங்கள்!" என்று சமிக்ஞை செய்ய, வாதாபி வீரர்கள் கும்பலாக வாசற் பக்கம் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தார்.

வீட்டிற்குள்ளே தாம் அரும்பாடுபட்டுச் சமைத்த அற்புதச் சிலைகள்— அழகிய நடன வடிவங்கள் — தாறுமாறாய் ஒன்றோடொன்று மோதப்பட்டு அங்கஹீனம் அடைந்து கிடப்பதைக் கண்டார். அப்போது அவருடைய உடம்பின் மேல் யாரோ ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதுபோலிருந்தது. பழுதடைந்த சிலைகளை அருகில் போய்ப் பார்க்கலாமென்று எழுந்தார். அவருடைய வலது காலில் ஒரு பயங்கரமான வேதனை உண்டாயிற்று. எழுந்திருக்க முடியவில்லை. தமது வலது கால் எலும்பு முறிந்து போய் விட்டது என்பது அப்போதுதான் ஆயனருக்குத் தெரிந்தது.

அச்சமயம் பின்கட்டிலிருந்து ஆயனருடைய சகோதரி உடல் நடுங்க, கண்ணில் நீர் பெருக, ஓடி வந்து ஆயனரண்டை விழுந்தார். பாவம்! சற்று முன்னால் அந்தச் சிற்பக் கிரஹத்தில் வாதாபி வீரர்கள் செய்த அட்டகாசங்களைப் பார்த்து அவள் சொல்ல முடியாத பீதிக்கு ஆளாகியிருந்தாள்.

எல்லா வீரர்களும் வீட்டுக்கு வெளியே போன பிறகு, வாதாபி சக்கரவர்த்தி சாந்தமாக நடந்து ஆயனர் கிடந்த இடத்துக்கு அருகில் வந்தார். அவரைப் பார்த்து ஆயனர், "பிரபு! தங்களுடைய வீரர்கள் இப்படி அட்டூழியங்களைச் செய்யலாமா?" என்று கதறி விம்மினார்.

# பொழுது புலர்ந்தது



[ நமது விசேஷ நிருபர் ]

தினம் தினம் பொழுது புலர்ந்தான் செய்கின்றது; சூரியனும் உதயமாகின்றது.

ஆனாலும், சென்ற ஜூன் மீ 3உ சூரியோதயம் ஒரு தனி மகிமை பெற்று விளங்கிற்று. அந்த மகிமையை மற்ற இடங்களில் உள்ளவர்கள் கண்டார்களோ, என்னமோ, தெரியாது. அன்று காலை எட்டயபுரத்தில் தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் கூடியிருந்தவர்கள் நிச்சயமாய்க் கண்டார்கள். கண்டதோடு, "இது சாதாரணமாய்த் தினந்தோறும் உதயமாகும் சூரியன் அல்ல; தமிழ் நாட்டின் மகோன்னதத்தைப் பிரகாசிக்கச் செய்வதற்காகவே உதித்த தனிப் பெருமை வாய்ந்த சூரியன்" என்பதாக அறிந்தார்கள்.

பொழுது புலர்ந்தது; யாம்செய்த தவத்தால்
புன்மை இருட்கணம் போயின யாவும்
எழுபசும் பொற்சுடர் எங்கணும் பரவி
எழுந்து விளங்கிய தறிவெனும் இரவி

என்று பாரதியார் பாடியது இந்த ஜூன் மீ 3உ சூரியோதயத்தைப்பற்றித்தான் என்றும் உணர்ந்தார்கள்.

அன்று அதிகாலையில் பளபளவென்று கிழக்கு வெளுத்துக் கொண்டிருந்தபோதே, பாரதியார் ஞாபகார்த்த மண்டபம் அமையப் போகும் ஸ்தலத்தில், அஸ்திவார விழாவுக்காகப் போட்டிருந்த விஸ்தாரமான பந்தலில், ஜனங்கள் திரள் திரளாக வந்து கூட ஆரம்பித்து விட்டார்கள். சூரியன் உதிப்பதற்கு முன்பே சுமார் 3000 பேர் கூடி விட்டார்கள். சரியாகச் சூரியோதயம் ஆகிக்கொண்டிருந்த சமயத்தில் ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார், ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், எட்டயபுரம் சமஸ்தான மகாராஜா, டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், டாக்டர் சுப்பராயன், ஸ்ரீ வ. வைத்தியநாத ஐயர் முதலிய தலைவர்கள் பந்தலுக்கு வந்து சேர்ந்தார்கள்.

## அஸ்திவார விழா ★

உடனே பாரதியார் ஞாபகார்த்த மண்டபத்தின் அஸ்திவார நாட்டு விழா ஆரம்பமாயிற்று. அஸ்திவாரத்துக்காகத் தோண்டப்பட்டிருந்த பள்ளத்தில், ராஜாஜியும் எட்டயபுரம் மகாராஜாவும் இறங்கினார்கள். ஏற்கெனவே கொத்தனார் அங்கு ஆயத்தமாயிருந்தார். எட்டயபுரம் ராஜா எடுத்துக் கொடுத்த செங்கல்லை ராஜாஜி தமது இரு கரங்களினாலும் வாங்கித் தலையில் வைத்தார். கொத்தனார் கரணையில் எடுத்துக் கொடுத்த சுண்ணாம்பை மேலே தடவி, மீண்டும் அங்கிருந்த ஏழெட்டுச் செங்கற்களையும் ஒவ்வொன்றாய் எடுத்து வைத்துச் சுண்ணாம்பு தீற்றினார்.

அச்சமயம் பாரதியாருடைய இரு புதல்விமார்களும் பேத்தியும்,

"முருகா முருகா முருகா
வருவாய் மயில்மீதினிலே
வடிவேலுடனே வருவாய்!"

என்றும் தமிழ்க் கடவுளின் அரிய தோத்திரப் பாடலை அருமையாகப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

ராஜாஜி எல்லாச் செங்கல்களையும் எடுத்து வைத்துவிட்டுப் பள்ளத்திலிருந்து மேலே ஏறியபோது, "கல்கி" ஆசிரியர் ராஜாஜிக்கு மலர் மாலைகள் அணிந்து வரவேற்று, "தங்களை அஸ்திவாரக் கல் மட்டுந்தான் நாட்டச் சொன்னோம். தாங்கள் கட்டடத்தையே கட்டி விடுவீர்கள் போலிருக்கிறதே!" என்று கூற, அருகிலிருந்தவர்கள் எல்லாரும் 'கொல்' என்று நகைத்தார்கள்.

இப்படிக் குதூகலமான சிரிப்புக்கிடையே தலைவர்கள் எல்லோரும் மேடைக்குச் சென்று அமர்ந்தார்கள்.

கானஸரஸ்வதி ஸ்ரீமதி D. K. பட்டம்மாள் "பொழுது புலர்ந்தது" என்னும்

பாரதியாரின் மதுர கீதத்தைப் பூபாளம், பிலஹரி முதலிய நாலு ராகங்களில் பாடிய பின்னர், நடவடிக்கைகள் ஆரம்பமாயின.

## சபை அமைப்பு ★

மேடையிலிருந்து பார்த்தால், அந்தச் சூரியோதய வேளையில் பந்தலில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் அமர்ந்திருந்த காட்சி கண் கொள்ளாக் காட்சியா யிருந்தது.

(அஸ்திவாரக் கல் நாட்டும்போது மூவாயிரம் பேராயிருந்த கூட்டம் வரவரப் பெருகி, ராஜாஜி பேசும் சமயத்தில் பதினாயிரம் பேருக்குமேல் ஆகிவிட்டது.)

மேடைக் கெதிரே பத்திரிகை நிருபர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் தனியாக இடம் வகுக்கப்பட்டிருந்தது. அவ்வாறே மேடைக்குப் பக்கத்தில் ஸ்திரீகளுக்கும் தனியாக இட வசதி செய்யப்பட்டிருந்தது. சுமார் நூறு பெண்மணிகளுக்கு மேல் அந்த அதிகாலை நேரத்தில் அங்கு வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

பந்தலில் கூடியிருந்தவர்களில் குறைந்த பட்சம் சுமார் இரண்டாயிரம் பேர், வெளியூர்களிலிருந்து அதாவது தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருக்கலாம் என்று மதிப்பிடப்பட்டது. கொழும்பிலிருந்து இந்த வைபவத்துக்காகவே ஒரு அன்பர் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

மேடையிலும் பந்தலிலும் அமர்ந்திருந்த பிரமுகர்களில் முக்கியமானவர்கள் வருமாறு:—ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜ கோபாலாச்சாரியார், ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், கனம் எட்டயபுரம் சமஸ்தான மகாராஜா, டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், டாக்டர் சுப்பராயன், ஸ்ரீ எஸ். சோமசுந்தர பாரதியார், ஸ்ரீ எ. வைத்தியநாதய்யர், கவிஞர் ராமலிங்கம் பிள்ளை, ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை எம். எல். ஏ., ஸ்ரீ என். ஹாலாஸ்யம் எம். எல். ஏ., கட்டிடச் சிற்ப நிபுணர் ஸ்ரீ எஸ். எம். சித்தலே, ஸ்ரீ எஸ். கிருஷ்ணசாமி பாரதி, ஸ்ரீமதி லக்ஷ்மி பாரதி எம். எல். ஏ., தூத்துக்குடி ஸ்ரீ எம். சி. வீரபாகுப் பிள்ளை, ஸ்ரீ ஏ. ஆர். ஏ. எஸ். துரைசாமி நாடார் எம். எல். ஏ., பாரதியாரின் சகோதரர் ஸ்ரீ சி. விசுவநாதய்யர், பாரதியாரின் புதல்விகளான ஸ்ரீமதிகள் தங்கம்மாள் பாரதி, சகுந்தலா பாரதி, ஸ்ரீ சோமயாஜுலு, கோவை ஸ்ரீ என். லக்ஷ்மணன், சேலம் ஸ்ரீ ஏ. சுப்பிரமணியம், திருநெல்வேலி புரொபஸர் ஸ்ரீ சீனிவாச ராகவன், "ப்ரீ ப்ரஸ்" ஆசிரியர் ஸ்ரீ ஈ. கிருஷ்ணய்யர், "ஜனசக்தி" ஆசிரியர் ஸ்ரீ பி. ராமமூர்த்தி, "நவயுவன்" ஆசிரியர் ஸ்ரீ வீர சிதம்பரம் செட்டியார், சென்னை தேசபக்தர் ஸ்ரீ சிவஞான கிராமணியார், கோயமுத்தூர் ஸ்ரீ கே. சுப்பிரமணியம் (சுப்ரி), "பிரசண்ட விகடன்" ஆசிரியர் ஸ்ரீ நாரண துரைக்கண்ணன், ஆக்கூர் ஸ்ரீ அனந்தாச்சாரியார், திருநெல்வேலி ஸ்ரீ ஏ. வி. சுப்பிரமணிய ஐயர், ஸ்ரீ எஸ். ஷண்முகம் பிள்ளை, ஸ்ரீ டி. கே. பகவதி (டி. கே. எஸ். சகோதரர்), புத்தனேரி தமிழ்த் தொண்டர் ஸ்ரீ ரா. சுப்பிரமணியன், "ஹிந்துஸ்தான்" உதவி ஆசிரியர் ஸ்ரீ கே. சடகோபன், சங்கரன் கோவில் ஸ்ரீ அம்பலவாணம் பிள்ளை, தமிழ்ப்பண்ணை ஸ்ரீ கா. அண்ணாமலை, ஸ்ரீ வி. ரகுநாதன் (பாரதி நிதிக்கு முதல் நன்கொடையாளர்), டாக்டர் சங்கரநாராயண அய்யர், காரைக்குடி காந்தாள் ஸ்ரீ வி. வி. ஆர். எம். அழகப்பச் செட்டியார் ஆகியோர்.

சபை ஏழு மணிக்கு ஆரம்பமாகிச் சரியாக 12-30 வரையில் மொத்தம் 5-30 மணி நேரம் நடைபெற்றது. அத்தனை நேரமும் மேலும் மேலும் ஜனங்கள் வந்துகொண்டிருந்தார்களே யல்லாமல், ஒருவராவது பந்தலிலிருந்து எழுந்து செல்ல வில்லை யென்பது குறிப்பிடத் தக்கது.

காந்திஜியின் சொந்தத் தமிழ்க் கையெழுத்தில் எழுதப்பட்டிருந்த ஆசிக் கடிதம், கீழ்க்கண்ட விதமாக படங்களுடன் சேர்த்துக் கண்ணாடியும் சட்டமும் போடப்பட்டுத் திருவிழா மேடையை அலங்கரித்தது.

பாரதி ஞாபகார்த்த
பிரயத்தனங்களுக்கு என்
ஆசீர்வாதம்
மோ. க. காந்தி





ஜூன் மீ 3உ அதிகாலையில் விஸ்தாரமான திருவிழாப் பந்தல் முழுதும் ஜனங்கள் நிறைந்த பின்னர், வெளியிலும் ஜனக்கூட்டம் திரள ஆரம்பித்தது.

## வாழ்த்துத் தந்திகள் 

ஜூன் மீ 3உ யன்று எட்டயபுரம் வந்திருந்தவர்களைத் தவிர, நாடெங்கும் பரவிப் படர்ந்துள்ள தமிழன்பர்களின் உள்ளங்கள் எல்லாம் அன்று எட்டயபுரத்திலே தான் இருந்திருக்க வேண்டுமென்று வாழ்த்துச் செய்திகளின் மூலம் தெரியவாதது. தந்தி மூலம் வந்த சில வாழ்த்துச் செய்திகள் வருமாறு :—

"தேசிய மகா கவியைப் போற்றி வாழ்த்துகிறேன்." —ஸரோஜினி தேவி.

"பாரதியின் பாடல்கள் தேச பக்தி, சுயமரியாதை, சுதந்திர உணர்ச்சி இவற்றைப் போதிக்கின்றன. அவருடைய போதனைகளைப் பின்பற்றி நடப்பதே அவருக்குச் சிறந்த ஞாபகச் சின்னம்."

—புலாபாய் தேசாய்.

"பாரதி விழாக் கொண்டாட்டத்தில் காணும் மகிழ்ச்சியுடன் கலந்து கொள்கிறேன்." —தேவதாஸ் காந்தி.

"தீர்க்கதரிசியும் தேச பக்தரும் கவிஞருமான பாரதியின் ஞாபகார்த்த விழா வெற்றியுடன் நடப்பதாக. ராஜாஜி அஸ்திவாரக் கல் நாட்டுவது மிகவும் பொருத்தமானது."

—பம்பாய்த் தமிழ்ச் சங்கம்.

"விழா வெற்றிகரமாக நடக்க வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்."

—வி. எல். நாஸோ.

"அமர கவிக்கு அழியாத ஞாபகச் சின்னம் சிறவும் முயற்சி நன் முயற்சியாகும். புதுவையும் சென்னையும் எட்டயபுரத்தைப் பின்பற்றுமாக!"

—டாக்டர் அழகப்பச் செட்டியார்.

"இந்தச் சுதினமான தினத்தில் கல்கத்தா தென் இந்தியர்களாகிய நாங்கள் உங்களுடனேயே இருக்கிறோம். நமது தாய்மொழி செழித்தோங்குக!"

—கல்கத்தா தென் இந்தியர் சங்கம்.

"பாரதி ஞாபகச் சின்னம் உயர்ந்த கொள்கைகளையும் லக்ஷியங்களையும் சிலை காட்டி மக்களின் வாழ்க்கையைப் புனிதப் படுத்தும். பெரிய கவிகள் காணும் கனவுகளால்தான் தேசம் முன்னேறுகிறது."

—கப்பாராயர், சென்னை.

"தெய்விகக் கவி பாரதியாருக்காக இன்று ஏற்பட்டுக் கொண்டிருக்கும் ஞாபகச் சின்னம் தமிழர்கள் அவர்மீது கொண்டுள்ள அன்புக்கும் பக்திக்கும் அறிகுறியாகும்."

—கொழும்பு வெஸ்டன் நியூஸ் ஏஜன்ஸிஸ்.

"விழா வெற்றியுடன் நடக்கப் பிரார்த்திக்கிறேன்." —ஸி. ஆர். சீனிவாசன்.

(ஆசிரியர், சுதேசமித்திரன்.)

"எட்டயபுரத்தில் நடக்கும் பாரதி விழா அமோகமாக வெற்றி பெறுக."

—எஸ். வி. ஸ்வாமி.
(பிரீ பிரஸ், பாரத தேவி)

"எதிர்பாராத காரணங்களால் வர முடியாமைக்கு வருந்துகிறேன். விழா வெற்றியுடன் நடக்கப் பிரார்த்திக்கிறேன்."

—சர்தார் வேதரத்தினம்.

"பாரதி ஞாபகச் சின்னம் நிறுவும் முயற்சியைப் பாராட்டுகிறோம்."

—ஜஸ்டிஸ் & ஸ்ரீமதி ஏ. எஸ். பி. ஐயர்.
(பங்களூர்)

"சுதந்திரத்துக்காகப் பாடிய பாரதி விழாவில் பம்பாய் பெருமையுடன் கலந்து கொள்கிறது. கவிஞருக்கு அழியாத ஞாபகச் சின்னம் ஏற்படுவதற்காகப் பாடு பட்டுக் கொண்டிருக்கும் 'கல்கி' அவர்களுக்குத் தேசம் கடமைப் பட்டுள்ளது."

—எச். சிவராம கிருஷ்ணன், பம்பாய்.

"பாரதியாருக்கு ஞாபகச் சின்னம் எழுப்புவது நாங்கள் தமிழர்களுக்குச் செய்யும் பெருந் தொண்டாகும். அன்றிவார விழாவுக்கு ராஜாஜி தலைமை வகிப்பது மிகவும் பொருத்தம்."

—சுவாமி ஐயங்கார், மாயவரம்.

"நமது தமிழ்க்கவி பாரதியாரின் ஞாபகார்த்த தினம் ஒவ்வொரு இந்தியன் மனதிலும் என்றும் வேரூன்றி நிற்கும்."

—நவாப் ராஜமாணிக்கம்.

"ராஜாஜியின் புனிதமான தலைமையில் ஞாபகச் சின்ன முயற்சி ஓங்கி வளரட்டும்."

ஜி. என். பாலசுப்பிரமணியம்.

"இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகை தன் மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது." —காஸா சுப்பாராவ்.

"கொண்டாட்டத்தில் தினமணிப் பத்திரிகை மனமாரக் கலந்து கொள்கிறது."

—வெங்கடாச்சாரியார்.

"இந்த ஞாபகச் சின்ன முயற்சி மேலும் மேலும் வளர வேண்டுமென்று பகவானை வேண்டுகிறேன்." —மதுரை பா[illegible].

பின்கண்டவர்களும் வாழ்த்துத் தந்திகள் அனுப்பியிருந்தார்கள்:

பம்பாய் ஸ்ரீ வெங்கடசாமி, சித்தூர் ஸ்ரீ வி. நாகையா, தேவகோட்டை ஸ்ரீ டி. ஆர். அருணாசலம், சக்தி ஆசிரியர் ஸ்ரீ வை. கோவிந்தன், ஸ்ரீ சகுந்தலா பாரதியும் ஸ்ரீமதி ராஜம் பாரதியும், பம்பாய் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சர்க்கிள், ஜெமினி ஸ்ரீ சதாசிவமும் ஸ்ரீமதி எம். எஸ். கமலாவும்; கொழும்பு ஸ்ரீ ராஜாராமும் ஜெயராமும், ஸ்ரீ கே. சாரங்கபாணி, சக்திதாசன் சுப்பிரமணியம், ஹிஸ்மாஸ்டர்ஸ் வாய்ஸ், சென்னை,

அன்றிவார விழாப் பந்தலில் கூடியிருந்த பெருங் கூட்டத்தில் ஒரு பகுதி: பந்தல் நிறைந்த பிறகு வெளியிலேயும் சுவர் வைத்தாற்போல் ஜனங்கள் நின்றார்கள்.





இதோ, தலைவர்கள் வந்து விட்டார்கள். இனி விழாவைத் தொடங்கவேண்டியதுதான்.

ஜூபிடர் பிக்சர்ஸ், திருநெல்வேலி ஸ்ரீ இராமநாதன், எல்லிஸ் ஆர். டங்கன், சென்னை சரஸ்வதி ஸ்டோர்ஸ், பரமக்குடி கோவிந்தண்ணா, நாகர்கோவில் வக்கீல் ஸ்ரீ பாண்டிய நாடார், திருச்சி ஸ்ரீ கிருஷ்ண சர்மா, திருச்சி சௌராஷ்டிர தேசிய இளைஞர் சங்கம், திருச்சி சௌராஷ்டிரக் காங்கிரஸ் சங்கம், ஸ்ரீ பாண்டியன், மதுரை ஸ்ரீ ராமசுப்ரமண்யம், 'பம்பாய் விரானிகள்' ஸ்ரீ சிதம்பரம், பம்பாய்க் கல்விச் சங்கத் தலைவர் ஸ்ரீ ராமலிங்கம், திருச்சி ஸ்ரீ எல். என். எஸ். மணி, பம்பாய் ஷண்முகானந்த சபை, பம்பாய் டி. கே. சுப்ரமணியம், பம்பாய் டெலிபோன் கம்பெனி ஸ்ரீ நாராயண ஐயர், பம்பாய் ஸ்ரீ பத்மநாபன், பம்பாய் ஸ்ரீ சி. ஜி. ராமன், கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம், சென்னை காரிகார் அண்டு கூரி, சென்னை ஸ்ரீ கே. எஸ். நாராயணன், பம்பாய் சங்கீத சபை, சூர்ஜலம் ஸ்ரீ சுப்பாராவ், நாத்தக்குடி ஸ்ரீ மர்ச்சீட்டா, டாக்டர் ஒ. ஆர். பாலு.

## வாழ்த்துக் கடிதங்கள் ★

பின்வரும் பிரமுகர்களிட மிருந்தும் தமிழன்பர்களிட மிருந்தும் வாழ்த்துக் கடிதங்கள் வந்திருந்தன :—

"அன்பின் பெருக்கோ, ஆர்வத்தின் வெள்ளமோ, இதயத்தின் எக்களிப்போ, உணர்ச்சியின் அனுபூதியோ, என்று நிர்ணயம் செய்ய முடியாத வகையில் தவ்விவோ பாரதியார் தமிழை அலங்கரித்து விட்டார்? நீங்கள் செய்வது நமது கடமையே யாகும்."

—தீனப்புரர் மணி
ஸ்ரீ டி. என். கிருஷ்ணசுவாமி ஐயர்.
(திருவனந்தபுரம் பிரதம நீதிபதி)

"எட்டயபுரத்தில் பாரதியார் பிறந்து வளர்ந்தார். அவருடைய ஞாபகார்த்த நிலயம் அங்கே அமைவது மிகவும் பொருத்தமானது. தமிழ் மொழியையும், புலவர்களையும் பாரம்பரையாக ஆதரித்த இந்த சமஸ்தானத்தில் ராஜா அவர்கள் பாரதியார் ஞாபகார்த்த நிலயத்திற்கு நிலம் அளித்து ஆதரிப்பது மிகவும் போற்றத்தக்கது.

பாரதியாரின் ஞாபகார்த்த அஸ்திவார விழா சிறப்பாக நடைபெற்று நிலயம் சீக்கிரம் கட்டப் பெற்று, பாரதியாரின் பெருமைகளைத் தமிழர்களுக்கு விளக்கி நிற்க ஞாபகார்த்தச் சின்னமாக அது நீண்ட காலம் பிரகாசித்து வர வேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன்."

—ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார்.

"எட்டயபுரம் போந்து விழாவில் கலந்து கொள்ள இயலாமை குறித்து வருந்துகிறேன். விழா நன்கு நடைபெறுக! தமிழ் நிலயம் எழுக! கல்கி முயற்சி வெல்க! பாரதி வாழ்க!"

—திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

"தமிழர் ஆவி வந்து கலையாகக் குவிக! தங்கள் கைராசியால் பாரதி நிதி பெருகி,

எட்டயபுரம் ராஜா செங்கல்லை எடுத்துக் கொடுக்க ராஜாஜி வாங்கி அஸ்திவாரம் இடுகிறார்.



இந்த நிலையம் உருக்கொள்கிறது. இது தமிழகத்திற்கே ஒரு வெற்றித் திருமாளிகை யாகும். பாரதியார் தந்த புதுத் தமிழே இன்று தமிழுலகை ஆளுகிறது. இந்தத் திருநாளே உண்மையான மறுமலர்ச்சித் திருநாளாகும். பாரதியார் கவி மின்சாரம். அந்த மின்சாரம் தமிழரின் நரம்பிற் சுழன்று, காரிய சக்தியாகப் பரிணமிக்கிறது. இந்த மாளிகை பாரதி வாக்கின் சக்தி நிலையாக விளங்குக.''

—சுவாமி சுத்தானந்த பாரதி.



அஸ்திவாரம் இட்டபிறகு ராஜாஜி கொத்தனுக்குக் கொடுக்கப் படும் தாம்பூலம் எடுக்கிறார்.

''பாரதியின் ஞாபகார்த்தமாக அவருடைய ஜனன ஸ்தலமாகிய எட்டயபுரத்தில் ஒரு ஞாபகார்த்த நிலையம் கட்டுவதைப் பற்றி தமிழ் நாட்டிலுள்ள அனைவரும் உள்ளம் பூரிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. தங்களுக்கும், மற்றும் உதவி செய்த பல நண்பர்களுக்கும் தமிழ்நாடு கடமைப் பட்டுள்ளது.''

—மேயர் ராதாகிருஷ்ணப் பிள்ளை.

'' இந்த விழா தமிழுக்கும், என் தமிழ் நாட்டுக்குமே ஏற்பட்ட விழாவென்றே நாம் அனுபவிக்கலாம். மகா கவி பாரதியார் செய்த தமிழ்த் தொண்டும் தமிழ்நாட்டுத் தொண்டும் தெய்வத் தொண்டும் என்றைக்கும் தமிழ் மக்கள் மறக்க முடியாது.

தமிழ் மக்கள் எல்லோரும் இந்த ஞாபகார்த்த நிலையத்துக்கு வேண்டிய நன்கொடை அளிக்க வேணுமென்று கேட்ட மாத்திரத்திலேயே பொன்மாரி பெய்தாற் போல் பணம் வந்து சேர்ந்தது தமிழ் மக்களுக்கு நல்ல உணர்ச்சி ஏற்பட்டிருப்பதற்கு அறிகுறியாகும்.''

—தே. பாலசுப்ரமணிய ஐயர் பி. ஏ., பி. எல்.

'' எட்டயபுரத்தில் மட்டுமின்றித் தமிழ் நாட்டின் ஒவ்வொரு சிற்றூரிலும் பாரதி நிலையங்கள் திறக்கப்பெற்று பாரதியார் பெயரும், அவர் எண்ணங்களும், உணர்ச்சிகளும் எங்கும் வியாபிக்க வேண்டும் என்பது நூல் நிலையச் சங்கத்தாராகிய எங்கள் பிரார்த்தனை.''

—ராவ்பகதூர் கே. வி. கிருஷ்ணசாமி ஐயர்.
(சென்னை நூல் நிலையச் சங்கத் தலைவர்.)

'' எட்டயபுரம் உற்சவம் அமோகமான வெற்றியுடன் நடைபெற வேண்டும் என்பது என் பிரார்த்தனை.'' —வ. ரா.

'' இவ் வைபவம் தலைவர் ராஜாஜி அவர்களைக் கொண்டே நடைபெறுவது மிகவும் பொருத்தமானது. தமிழரின் அபிலாஷைக் கேற்ப இம் முயற்சி சகல வெற்றியையும் அடைய வேண்டுமென்பதே என் ஆவல்.''

—டி. எஸ். சொக்கலிங்கம்.

'' கல்கி '' மானேஜர் ஸ்ரீ டி. சதாசிவம் வாழ்த்துத் தந்திகளைப் படிக்கிறார்.





மகாகவி பாரதியாரின் சகோதரர் ஸ்ரீ சி. விசுவநாதய்யரும், புதல்விகள் ஸ்ரீமதி தங்கம்மாளும் ஸ்ரீமதி சகுந்தலாவும், பேத்தி பேரர்களும் திருவிழாவுக்கு வந்திருந்ததுடன், பாரதியார் பாடல்களை அழகாகப் பாடி விழாவைச் சிறப்பித்தார்கள்.

"இறைவன் கருணையால் வைபவம் சேர்த்தியாக இதுவரையும் கண்டும் கேட்டும் இராத முறையில் நடைபெற வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்."

—டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி.

"உயிருள்ள காலத்திலேயே பாரதியாரைச் சரியாகக் கொண்டாடவில்லை என்பார்கள் சிலர். கவனிக்கையில், இவ்வளவு நாட்கள் கழித்த பிறகு அவரை அதிகமாய்ப் போற்றத் துணிவது ஒன்றே அவருக்குள்ள மதிப்பை அதிகம் விளம்பரம் செய்வதாகும். வருஞ்சந்ததிகள் மாறாத குன்றாத மரியாதையைக் கவிஞருக்கு இனிச் செய்வார்கள் என்பதை இந்த அஸ்திவார விழா ருஜூப்படுத்துகிறது."

—சி. சந்திரசேகரன்.

"எட்டயபுரத்திற்கு எவ்வளவோ பழம் பெருமை உண்டு; எனினும் பாரதி பிறந்த ஊர் என்ற பெருமை விசேஷமானது. இவ்வூர் தேசியத் தமிழ்நாட்டின் காசியாக நீண்டகாலம் விளங்கவேண்டும் என்பது என் ஆவல். இந்த ஸ்தலத்திலே பாரதியாரின் ஞாபகக்குறி ஒன்று ஏற்படுவது அவசியம் என்று கருதிய கல்கியின் நன் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது."

—பி. ஸ்ரீ. ஆச்சாரியா

"புதிய தமிழ் நாட்டின் அஸ்திவார விழாவாகவே கருதுகிறேன். இந்த முயற்சியின் வளர்ச்சியே தமிழ்நாட்டின் வளர்ச்சி."

—வி. பூவராகன்.

"ஆண்டவன் அருளால் விழா நன்றாக நடந்து அந்த ஸ்தாபனம் நாட்டிற்குப் பயன்பட வேண்டும்." —தி. சு. அவினாசிலிங்கம்.

"விழா இனிது நடைபெறுவதுடன் ஞாபகார்த்த நிலையம் சீக்கிரத்திலேயே சிறப்பாக அமைக்கப்படும் என்று நம்புகின்றேன்." —எம். பக்தவத்சலம்.

"இங்கிலாந்தில் ஷேக்ஸ்பியர் பிறந்த இடம் வளர்ந்த இடம் என்றெல்லாம் பெரியவர்கள் பெருமையுடன் குழந்தைகளுக்குச் சுட்டிக் காண்பிக்கிறார்கள். இவ்வளவு காலம் கழித்தாவது நமது தேசியக் கவியின் பெயர் அழியாமலிருப்பதற்கு ஒரு ஸ்திரமான ஞாபகச் சின்னம் ஏற்படுவதைப் பற்றித் தமிழ் அன்பர்கள் நண்பர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்திக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறார்கள்."

—எஸ். ராமரத்னம்.

(ஆசிரியர், பாரததேவி)

"விழா சிறப்பாக நடைபெறுமென்று நம்புகிறேன். பாரதி ஞாபகச் சின்னம் தோன்றுவதற்குக் காரணமான கல்கியோ



அன்றிவாரத் திருவிழாவை யொட்டி 2ஆ 3ஆ களில் பல சங்கீதக் கச்சேரிகள் சிறப்பாக நடைபெற்றன. 2ஆ சாயங்காலம் கான சரஸ்வதி ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாளின் கச்சேரி நடந்தபோது, பந்தலில் மட்டு மின்றி மேடையிலும் இட நெருக்கடி ஏற்பட்டது.

ருக்கும் தமிழ் நாட்டார் நன்றி உரியதாகும். பாரதியாரின் பழைய நண்பர்களில் ஒருவனான நான் இது பற்றி எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறேன் என்பதைச் சொல்வது மிகையாம்.'' —பரலி சு. நெல்லையப்பர்.

''பாரதியார் பிறந்த இடம் கிராமமாயிருந்தாலும், ஞாபகச் சின்னம் அமைக்க அந்தக் கிராமத்தைத் தேர்ந்தெடுத்ததைப் பெரிதும் பாராட்டுகிறோம். தமிழர்கள், வடநாட்டார் அனைவருக்கும் எட்டயபுரம் ஒரு யாத்திரை ஸ்தலம் ஆகட்டும்!''

—லக்ஷ்மி அம்மாள், சங்கரய்யர்.

மேலும் வாழ்த்துக் கடிதங்கள் அனுப்பிய தமிழ் அன்பர்கள் :—

கோவை ஸ்ரீ சி. சுப்ரமணியம், பூனை கலைக்கழகம் தலைவர் ஸ்ரீ சே. செங்கசாமி, ஸ்ரீ ஏ. கிருஷ்ணசாமி வாண்டையார், கோவை ஸ்ரீ வா. கிருஷ்ணமூர்த்தி, அல்லயன்ஸ் கம்பெனி ஸ்ரீ வி. குப்புசாமி ஐயர், கல்லிடைக்குறிச்சி ஸ்ரீ இ. எஸ். சங்கர நாராயண அய்யர், தீர்த்த நியாயாதிகள் நைனாக்குடல் ஹெட்மாஸ்டர் ஸ்ரீ எஸ். பாலகிருஷ்ண பிள்ளை, கீழச்சேவல்பட்டி ஸ்ரீ. மு. இரத்தினசபை ஐயர், ஸ்ரீ ஜே. தங்கவேல் (சரம்), மதுரை ஸ்ரீ டி. கே. ஜெயராம், சங்கரன் கோவில் ஸ்ரீ எம். கே. பாலகிருஷ்ணன், சென்னை துரை. அரங்கநாதன், சரஸ்வதி ஸ்டோர்ஸ் ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பச் செட்டியார், திருவனந்தபுரம் ஸ்ரீ டி. எல். மகாதேவனும் அவர் நண்பர்களும், பாரத தேவி ஸ்ரீ எஸ். நடராஜன், கும்பகோணம் டாக்டர் ஸ்ரீ ரா. மகாலிங்கம், நாகர் கோவில் ஸ்ரீ கு. கும்பலிங்கம், கலைமகள் ஸ்ரீ ஆர்வி, கா. ஸ்ரீ. ஸ்ரீ, திரு ஜெ. இ. ஏ. பெரைரா எம். எல். ஏ., கலைகப்பிரசுராலயம் ஸ்ரீ ச. சிதம்பரம், துறையூர் ஸ்ரீ வல்லிக்கண்ணன், மெட்ரோ அனை தமிழ்ப்பண்ணைத் தலைவர். ஸ்ரீ மு. அருணாசலம், ''தியாகி'' ஆசிரியர் ஸ்ரீ இராம சடகோபன், ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், மாயவரம் ஸ்ரீ ஜி. நாராயணசாமி நாயுடு. ''கலா மோகினி'' ஆசிரியர் ஸ்ரீ வி. ரா. ராஜகோபாலன், நச்சாந்துப்பட்டி ஸ்ரீ சீவன், கோம்பை சப் போஸ்ட்மாஸ்டர் ஸ்ரீ க. ஷண்முக சுந்தரம், தூத்துக்குடி இசைக் கழக காரியதரிசி ஸ்ரீ எஸ். கிருஷ்ணமூர்த்தி, கோவை ராமகிருஷ்ண வித்யாலயம் ஹெட்மாஸ்டர் ஸ்ரீ ம. ப. பெரியசாமி (பெ. தூரன்), கோம்பை ஸ்ரீ தி. போ. நாராயணசாமி பாரதி, திருநெல்வேலி தமிழ் ஆசிரியர் ஸ்ரீ முத்துசிவன், திண்டுக்கல் ஸ்ரீ ரா. முருகேசக் கவிராயர், நாமக்கல் ஸ்ரீ க. வெ. வேங்கடாசல செட்டியார்.

வாழ்த்துச் செய்திகளில் எல்லாவற்றிலும் முக்கியமானது காந்தி மகாத்மாவினிடமிருந்து வந்த ஆசிச் செய்தி என்று சொல்ல வேண்டியதில்லை. மகாத்மாவின் திருக்கரத்தினால் தமிழிலே எழுதப்பட்டிருந்த மேற்படி செய்தி, காந்திஜி படத்துடனும் பாரதி படத்துடனும் சேர்த்துச் சட்டம் போடப்பட்டு மேஜைமீது வைக்கப்பட்டிருந்தது. காந்திஜியின் ஆசிச் செய்தியை ராஜாஜி படித்துச் சபையோருக்குப் படத்தையும் காண்பித்த பிறகு, தந்திச் செய்திகளில் முக்கியமானவற்றை ஸ்ரீ டி. சதாசிவம் படித்தார். பிறகு, தமிழில் எழுதப்பட்டிருந்த வாழ்த்துக் கடிதங்களிலிருந்து சிற்சில பகுதிகளை ராஜாஜியே படித்துக் காட்டினார். ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின் கடிதத்தில் ஒரு பகுதியைப் படித்து விட்டு, "இதற்குமேல் பேஹாக் ராகம் தெரிந்தவர்கள் படிக்கலாம்!" என்று கடிதத்தைச் சபையோர் முன் நீட்டிய போது, ஒரே கல கலப்பும் சிரிப்பும் ஏற்பட்டன. பேஹாக் ராகம் தெரிந்தவர்கள் யாரும் படிப்பதற்கு முன்வராமற் போகவே, சுவாமிகளின் கீர்த்தனத்தையும் ராஜாஜியே வசன நடையில் படித்துக் காட்டினார்:—

[பேஹாக் ராகம் - ஆதி தாளம்]

பல்லவி

பாரதி வாழியவே சுப்ரமண்ய (பாரதி)

அனுபல்லவி

நாரியர் வாழ்வுக்கும் நாட்டுக்கும் சுதந்திர
பேரிகை கொட்டிய தீரன் ஜனோப காரன்
(பாரதி)

சரணம்

எல்லாரும் ஓர்குலம் ஓரினம்
என்றுணர்த்தி
இன்பத் தமிழகத்தில் அன்புக்
குயிலாய் வந்தே
சொல்லால் உலகை யெல்லாம்
வெல்லுந் திறம் படைத்த
சூரன், ஜயபாரத வீரக்
கவியரசன் (பாரதி)

வாழ்த்துச் செய்திகள் படிக்கப்பட்ட பின்னர், தலைவர்களுக்கு வரவேற்புப் பத்திரங்கள் படிக்கப்பட்டன. எட்டயபுரம் பாரதி இலக்கியமன்றத்தின் சார்பாகவும், எட்டயபுரம் பஞ்சாயத்து போர்டார் — ஏழைகளின் பண்டகசாலை சார்பாகவும், எட்டயபுரம் ஜவுளி வர்த்தகச் சங்கத்தார் சார்பாகவும், இன்னும் சில சங்கங்களின் சார்பாகவும் வரவேற்புப் பத்திரங்கள் அளிக்கப்பட்டன.

திருவிழாவின் தலைவர் ராஜாஜி, எட்டயபுரம் சமஸ்தான மகாராஜா, ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், டாக்டர் ராஜன், டாக்டர் சுப்பராயன், நாமக்கல் கவிஞர், "கல்கி" ஆகியவர்களுக்கு மேற்கண்ட ஸ்தாபனங்கள் ஒவ்வொன்றின் சார்பாகவும் வரவேற்புப் பத்திரம் அளிக்கப்பட்டது.

பாரதி இலக்கிய மன்றம், பஞ்சாயத்து போர்டு — இவற்றின் சார்பாக ஸ்ரீ கே. பி. எஸ். நாராயணன் பத்திரங்களைப் படித்தார். ஜவுளி வர்த்தகச் சங்கத்தின் சார்பாக மேற்படி சங்கத்தின் காரியதரிசி வரவேற்புப் பத்திரங்களைப் படித்தார்.

வாழ்த்துப் பத்திரங்கள் எல்லாம் அழகான இலக்கியத் தமிழில் ஆர்வமும் ஆவேசமும் ததும்ப எழுதப்பட்டிருந்தன. படித்தவர்களும் ஆர்வத்துடனும் ஆவேசத்துடனும் படித்தார்கள். சபையோரும் உற்சாகமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

"மாஸ்கோவின் வாசலில் போர் முழக்கம் கேட்டு, 'மண்டியிடும் ருஷ்யா' என்று மற்றவர்கள் சொல்ல, 'இறுதி வெற்றி ருஷ்யர்களுக்கே!' என்றுரைத்த அரசியல் தீர்க்கதரிசனந்தான் என்னே!" என்று ஒரு பத்திரத்தில் பொறித்திருந்ததை ஜவுளி வர்த்தகச் சங்கக் காரியதரிசி முழங்கிப் படிக்க, கூடியிருந்த சபையோர் குதூகலம் தாங்காமல், "சபாஷ்!" என்று ஆர்ப்பரித்துச் சட சட வென்று கரகோஷம் செய்தார்கள்.

வாழ்த்துப் பத்திரங்கள் படிக்கப்பட்ட போது மேடையில் சில சமயம் சுவாரஸ்ய யுத்தங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன!

அன்பர்கள் கொண்டு வந்திருந்த அத்தனை பத்திரங்களையும் படித்து முடிப்பதென்றால், அதற்கே பொழுது சரியாயிருக்குமென்று எண்ணி, தலைவர் ராஜாஜி, "யாருக்கு யார் அளிப்பது" என்பதை மட்டும் படித்து விட்டுக் கொடுத்து விடும்படி கட்டளை யிட்டார்.

சில சமயம் அக்கட்டளையை மீறிப் பத்திரங்களைப் படிக்கத் தொடங்கியபோதுதான், மேற்படி சுவாரஸ்ய யுத்தம் நிகழ்ந்தது. அவசரமாக தங்களுக்குரிய பத்திரங்களைப் பிடுங்கிக் கொள்ள முயல்வதும், படித்துக் கொண்டிருந்தவர் மேலும் படிக்க முயல்வதுமாயிருந்தபோது, சில சமயம் சபையோரும் குறுக்கிட்டு, "படிக்கட்டும், கேட்கிறோம்!" என்றார்கள்.

[மேல் நிகழ்ச்சிகளைத் தயவு செய்து அடுத்த "கல்கி" இதழில் படிக்கவும்.]



# ஆசி பெறுதல்

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

யுத்தம் ஆரம்பித்துவிட்டது என்று எல்லாரும் எண்ணியிருந்த தருணத்தில் வீரனும் தீரனுமான யுதிஷ்டிரன் திடீரென்று தன் கவசத்தைக் கழற்றிவிட்டு எல்லா ஆயுதங்களையும் தேரில் வைத்துவிட்டுக் கீழே இறங்கிக் கை குவித்துக் கொண்டு பாதசாரியாக பீஷ்மர் இருக்குமிடம் நோக்கிச் சென்றான். அவ்வாறு ஒன்றும் சொல்லாமல் யுதிஷ்டிரன் சென்றதைப் பார்த்து எல்லாரும் வியந்தார்கள்.

தனஞ்சயன் விரைவாகத் தேரினின்று கீழே குதித்து யுதிஷ்டிரனைப் பின்தொடர்ந்து வேகமாகச் சென்றான். அவன்கூட மற்ற சகோதரர்களும் கிருஷ்ணனும் சென்றார்கள். யுதிஷ்டிரன் ஒருவேளை தன் இயற்கை தருமத்தை அனுசரித்துக் கருணையால் தூண்டப்பட்டுத் திடீரென்று யுத்தம் வேண்டாம் என்பதாகத் தீர்மானித்து விட்டானோ என்று சந்தேகமும் கவலையும் பட்டார்கள்.

"ராஜாவே! எங்களை விட்டுவிட்டு ஒன்றும் பேசாமல் நிராயுதபாணியாகப் பகைவர்களை நோக்கிச் செல்லுவது என்ன காரணம்? சத்துருக்கள் கவசம் பூண்டு ஆயுதங்களை எடுத்து நிற்க, கவசத்தையும் ஆயுதங்களையும் வைத்துவிட்டு நீர் யுத்த ஆரம்ப சமயத்தில் தனியாக எங்கே போகிறீர்?" என்று அருச்சுனன் கேட்டான். ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்து சென்றுகொண்டிருந்த யுதிஷ்டிரன் ஒன்றும் பேசாமல் நடந்தான். அச்சமயம் வாசுதேவன் "இவருடைய கருத்து எனக்கு விளங்குகிறது. யுத்தம் துவக்குவதற்கு முன் பெரியோர்களிடம் அனுமதி பெறச் செல்கிறார். பெரியோர்களிடம் அனுமதி பெறாமல் யுத்தம் செய்தால் அது நிந்தனைக்கு இடமாகும். பீஷ்மத் துரோணர்களிடம் அனுமதி கேட்க தருமபுத்திரர் நிராயுதபாணியாகச் செல்கிறார். அது தருமத்திற்கு இசைந்ததும் ஜயம் உண்டாக்கத் தக்கதுமான முறை" என்றான்.

* * *

துரியோதனனுடைய சேனையிலிருந்தவர்கள் யுதிஷ்டிரன் கை கூப்பிக் கொண்டு பீஷ்மரிடம் வருவதைக் கண்டு, "அதோ பார், நம்முடைய சேனையைக் கண்டு பயந்துபோய்ச் சமாதானம் பெற யுதிஷ்டிரன் வணங்கி வருகிறான். இந்தக் கோழை மனிதன் க்ஷத்திரிய ஜாதிக்கு அவமானம் தருவதற்காகப் பிறந்தவன்" என்று ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டு தருமபுத்திரனை நிந்தித்தார்கள்.

பகைவர் படையில் ஆயுதபாணிகளாக நின்ற வீரர்களிடையில் யுதிஷ்டிரன் நுழைந்து நேராக பீஷ்மர் இருந்த இடம் சென்று அவருடைய இரண்டு பாதங்களையும் இரண்டு கைகளால் பிடித்து வணங்கி,

"எவராலும் ஜயிக்க முடியாத வீரரே! உம்முடன் போர் புரியத் துணிந்த எங்களுக்கு யுத்தம் துவக்க அனுமதி தர வேண்டுகிறேன். எங்களை ஆசீர்வதிக்கவும் கோருகிறேன்" என்றான்.

பிதாமகரான பீஷ்மர் "குழந்தாய்! பரதகுலத்தில் பிறந்த நீ குலத்தினுடைய தருமத்தின்படி நடந்தாய்! நான் மகிழ்ச்சியடைந்தேன். யுத்தம் செய், ஜயம் பெறுவாய்! எனக்குச் சுதந்தரம் இல்லை. பராதீனமாக இருக்கிறேன். நான் கௌரவர்கள் பக்கம் யுத்தம் புரியக் கட்டுப்பட்டவனாக இருக்கிறேன். ஆனாலும் உனக்குத் தோல்வியில்லை" என்றார்.

இவ்வாறு அனுமதியும் ஆசியும் பெற்ற யுதிஷ்டிரன் ஆசாரியரான துரோணரிடம் சென்று அவரையும் வலம் செய்து பணிந்தான். துரோணரும் தருமபுத்திரனை ஆசீர்வதித்தார்.

"பொருளானது எவனுக்கும் அடிமைப்படாது. மனிதன் பொருளுக்கு அடிமைப்பட்டவன் ஆகிறான். நான் கௌரவர்களுக்குக் கட்டுப்பட்டுப் போனேன். அவர்கள் பக்கம் யுத்தம் செய்வேன். ஆயினும் உனக்கு ஜயம் நிச்சயம்" என்றார். அவ்வாறே கிருபரிடமும் மாமன் சல்யனிடமும் போய்த் தரும புத்திரன் ஆசி பெற்றுத் திரும்பினான்.

• • •

போர் துவங்கிற்று. முதலில் வீரர்களுக்குள் துவந்த யுத்தங்கள் நடந்தன.

போலீஸ்காரர் சாப்பிடுகிறார்



தெருவில் வண்டிகளுக்குக் கை காட்டும் போலீஸ்காரர் "சாதத்தை நிறுத்து! ரஸம் இப்படி வரட்டும்!" என்று கை காட்டுகிறார்.

அதாவது சமமான ஆயுதங்களுடன் ஒருவரை ஒருவர் எதிர்த்துச் சண்டை செய்தார்கள். பார்த்தனை பீஷ்மர் எதிர்த்தார். சாத்யகி கிருதவர்மாவை எதிர்த்தான். அபிமன்யு பிருகத்பலனை எதிர்த்துப் போர் புரிந்தான். துரியோதனனை பீமன் எதிர்த்தான். யுதிஷ்டிரன் சல்யனை எதிர்த்தான். திருஷ்டத்யும்னன் துரோணரை எதிர்த்து இருவருக்கும் பெரும் போர் நடந்தது. இவ்வாறே அநேக வீரர்கள் யுத்த தருமப்படி துவந்த யுத்தம் நடத்தினார்கள்.

இவ்வாறு சம வீரர்களுக்குள் நடந்த ஆயிரக்கணக்கான துவந்த யுத்தங்களைத் தவிர சங்குல யுத்தமும் நடைபெற்றது. யார் யாருடன் என்பதில்லாமல் ஒரே கும்பமாகப் போர் நடப்பதற்கு 'சங்குல' யுத்தம் என்று பெயர். மிகவும் கோரமாக நடக்கும் அந்த சங்குல யுத்தங்களில் இருதரப்பிலும் எண்ணற்ற பேர்கள் பைத்தியம் பிடித்தவர்களைப்போல் போர் புரிந்து இறந்தார்கள். ரத்தமும் மாமிசமும் மண்ணும் கலந்த சேற்றில் படையாட்களும் சாரதிகளும் யானைகளும் குதிரைகளும் கொன்று வீழ்த்தப்பட்டுத் தேர்களைச் செலுத்த இடநெருக்கடி உண்டாயிற்று. தற்கால யுத்தங்களில் துவந்த யுத்தம் என்பது நின்று போயிற்று. எல்லாம் சங்குலமாகவே நடைபெறுகிறது.

* * *

பீஷ்மர் தலைமையில் கௌரவ வீரர்கள் பத்து நாட்கள் யுத்தம் நடத்தினார்கள். பீஷ்மர் வீழ்ந்த பின் துரோணர் தலைமை வகித்தார். துரோணரும் இறந்தபின் கர்ணன் கௌரவ சேனைக்குத் தலைவனானான். பதினேழாம் நாள் யுத்தத்தில் கர்ணன் இறந்தான். அதன் பின் சல்யன் தலைமை வகித்து கௌரவ சேனையை நடத்தினான்.

பாரத யுத்தம் பதினெட்டு நாள் நடந்தது. யுத்தத்தின் பிற்பகுதியில் அநேக கோரமான அதரும முறைகள் கையாளப்பட்டன. தருமம் ஒரே நாளில் இமுர் என்று கெடுவதில்லை. அவ்வப்போது சங்கடமான நிலைமைகள் நேரிட்டுத் தருமத்துக்குச் சோதனை உண்டாகிறது. பெரியோர்களும் தவறுகள் இழைத்து விடுகிறார்கள். பிறகு அதைப் பார்த்து மற்றவர்களும் அதருமத்தில் இறங்கி விடுகிறார்கள். இவ்வாறே அறம் அழிந்து மறம் ஓங்கும் காலம் உலகத்தை ஆட்கொள்ளுகிறது.

எதிர்பாராத தீ விபத்துக்களினால்

எத்தனையோ நஷ்டங்கள்!






அவற்றிற்கெல்லாம்

ஈடுகொடுப்பதே

எங்கள் அரிய சேவை!



விவரங்களுக்கு எழுதுங்கள் :—

## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

(இந்தியாவில் ஸ்தாபிதம் 1933)

தலைமை ஆபிஸ் : மதுரை

கிளை ஆபிஸ்கள் :

பம்பாய் : லாயிட்ஸ் பாங்க் பில்டிங், ஹார்ன்பி ரோடு
அகமதாபாத் : 1761, காந்தி ரோடு
கல்கத்தா : 26 டல்ஹௌஸி ஸ்குயர்
ராவல்பிண்டி : லாயிட்ஸ் பாங்க் காம்பவுண்டு, எட்வர்ட்ஸ் ரோடு

தீ விபத்து சம்பந்தமான சகலவித இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள்

மொத்த ஆஸ்திகள் : ரூ. 42,00,000-க்கு மேல்

பிரதம ஏஜண்டுகள் :
ஏ. & எப். ஹார்வி லிமிடெட், மதுரை etc.

---

## கோடை காலத்திற்குத் தகுந்த - - -

## குளிர்ந்த பானங்கள்

# கும்பகோணம் டி.எஸ்.ஆர்.

கம்பெனியின்

குங்குமப்பூ, நன்னாரி, ரோஸ்

ஆரஞ்சு முதலிய சர்பத்துகள்

மதராஸ் விடி ஏஜண்டுகள் :
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்,
திருவல்லிக்கேணி.

ஸ்டாக்கிஸ்டு :
B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்.



# பாழடைந்த வீடு

வஸந்தன்

ராமலிங்கம் நீலவேலி கிராமத்துக்கு மாற்றப்பட்டு வந்து பத்து நாளாக வில்லை. அதற்குள் அவனுக்கு உபாத்தியாயத் தொழில், குழந்தைக் கல்வி, தேசப் புனருத்தாரணம் எல்லாம் கஞ்சாகக் கசந்து விட்டன. சம்பளம் கொஞ்சமாயிருந்தாலும் பாதகமில்லை என்றுதான் அவன் உபாத்தியாயர் தொழிலில் சேர்ந்தான். அப்பொழுது அவன் என்ன வெல்லாமோ லட்சியக் கனவுகள் கண்டு கொண்டிருந்தான். நீலவேலி அவன் கனவைச் சிதற அடித்து விட்டது.

நீலவேலி நூறு வீடுகள் உள்ள சின்னஞ் சிறு கிராமம். பள்ளிக்கூட ரிஜிஸ்டரில் 25 பையன்கள் இருந்தார்கள். ஆனால் பள்ளிக்கூடத்துக்குப் பத்து அல்லது பதினொரு பேர்கள்தான் வருவார்கள். வந்தவர்கள் கூடத் திடீர் திடீரென்று மறைந்து போய் விடுவார்கள். மறைந்து போனவர்களைத் துரத்திக் கொண்டுபோய், சோளக் கொல்லையிலிருந்தோ மாடு மேய்க்கிற இடத்திலிருந்தோ பிடித்துக்கொண்டு வருவதற்குள் ராமலிங்கத்துக்கு அழுகை வந்துவிடும்.

இப்படி யெல்லாம் இருந்தும், ராமலிங்கத்துக்குப் பள்ளிக்கூடம் போவதென்றால் ஆனந்தமாகத்தான் இருந்தது. ஏனெனில், பள்ளிக்கூடம் போகும் வழியில்தான் மிட்டாதார் மருதநாயகம் பிள்ளையின் வீடு இருந்தது. மிகவும் அழகான வீடு. 'ஆஸ்பெஸ்டாஸ்' சிமிண்டினால் நவ நாகரிகமாகக் கட்டப்பட்டிருந்த வீடு. வீட்டின் முன்புறத்தில் அழகிய பூஞ்செடிகள் இருந்தன.

மேற்படி வீட்டின் எதிரே செல்லும் போது, ஒவ்வொரு நாளும் ராமலிங்கத்தின் உள்ளத்தில் விவரிக்க முடியாத ஒரு இன்பமும், பரபரப்பும் உண்டானதற்குக் காரணம் கேவலம் வீட்டின் அழகு மட்டும் எப்படிக் காரணமாயிருக்க முடியும்!

இதற்கெல்லாம் காரணம் கனகம்தான் என்பது ராமலிங்கத்திற்குத் தெரியாது. வாட்ட சாட்டமாய் ஒரு பெண் ஜன்னலோரம் நின்றுகொண்டு தன் இரு பெரிய கரு விழிகளால் போகும் போதும் வரும் போதும் அவனை உறுத்துப் பார்ப்பதை அவன் பார்த்திருக்கிறான். ஆனால் அவள் பெயர் கனகம்தான் என்பதை அவன் அப்பொழுது அறிந்திருக்கவில்லை.

அப்பொழுது மார்கழி மாதம். முதல் நாள் ராமலிங்கம் பள்ளிக்கூடம் போகும் போதே மிட்டாதார் வீட்டுப் பக்கம் அவன் பார்வை சென்றது. வீட்டின் வாசலில் ஒரு பெண் கோலம் போட்டுக்கொண்டு இருந்தாள். அவனைக் கண்டதும் தலை நிமிர்ந்து அவனைக் கடைக் கண்ணால் பார்த்தாள். அப்போது தேகமாத்திரத்தும் அவனுக்கு மெய் சிலிர்த்தது. வெகு சாவதானமாக மஞ்சள் நிறமான பரங்கிப் பூவை எடுத்துக் கீழே வைத்தபடியே அவள் தன்னைப் பார்ப்பதைக் கவனித்ததும், அத்தனை ரத்தமும் அவன் தலைக்கு ஏறி அவனுக்கு மதிமயக்கத்தை உண்டாக்கிற்று.

அதிலிருந்து தினமும் பள்ளிக்கூடம் வரும்போது மிட்டாதார் வீட்டுப் பக்கம் அவன் கண்கள் செல்லும். சொல்ல முடியாத ஒரு கிளர்ச்சியும் பரபரப்பும் அவனை வதைக்கும். இப்படியே ஒரு மாதகாலம் கடந்து விட்டது.

கனகம் மிட்டாதாரின் ஒரே பெண். எவ்வளவோ செல்வமாக வளர்ந்து வந்தாள். அருமைப் பெண்ணை ஒரு பணக்காரத் தந்தை படிப்பில்லாத பட்டிக்காட்டுப் பெண்ணாக வைத்திருக்க முடியாதல்லவா?

மிட்டாதார், பெண்ணுக்கு வெறும் ஆங்கிலப் படிப்புச் சொல்லிக் கொடுத்ததுடன் நின்று விடவில்லை. தமிழ் இலக்கியத்திலும் தமிழ் மொழியிலும் பெரிதும் ஆர்வமுள்ள மருதநாயகம் தாமே பெண்ணுக்கு அவற்றைப் போதிப்பார். தேவாரம், திருவாசகம் முதலிய நூல்களைச் சொல்லிக் கொடுப்பார். முக்கியமாக, பழந்தமிழர்களின் வீரத்தை நினைவூட்டும் பாடல்களைப் படிப்பதில் கனகத்துக்கு அலாதி ஆசை.

எத்தனை நாள்தான் ராமலிங்கம் மிட்டாதாரின் வீட்டைப் பார்த்து ஏங்கிப் பெருமூச்சு எறிந்து கொண்டிருக்க முடியும்? சுகாதார வாரம் என்று வருடத்தில் ஒரு தடவை கிராமத்தில் தடபுடலாக நடப்பது உண்டல்லவா? நிலவேலி கிராமத்தில் அதை நடத்திவைக்க வேண்டிய பொறுப்பு பள்ளிக்கூட உபாத்தியாயருடையது. ராமலிங்கமும் இந்த வருஷம் சக்கைப் போடு போட்டுவிடுவதென்று தீர்மானித்தான். மிட்டாதார் ஊருக்குப் பெரிய மனிதர்; அவரையே முதல் நாள் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கச் சொல்ல வேண்டும் என்பதை யாரும் அவனுக்கு ஞாபகப் படுத்தத் தேவையில்லை.

சாயங்காலம் கையெழுத்து மறையும் தருணம். மிட்டாதாரைப் பார்த்துப் பேசுவதற்காகப் புறப்பட்டான் ராமலிங்கம். அந்தச் சிமெண்டு வீட்டின் வாசல் வழியாக எவ்வளவோ தடவை போயிருக்கிறான். அப்பொழுதே அவன் இருதயம் தாங்க முடியாத தாபத்துடன் அடித்துக் கொண்டிருக்கிறது. அந்த வீட்டுக்குள்ளேயே போவதென்றால் லேசான காரியமா?

முதல் தடவையாக அவன் வீட்டின் எதிரில் நின்றபோது, அவன் இருதய ஓட்டமும் நின்றுவிட்டபோ லிருந்தது. அப்பொழுது வீட்டின் வாசற்கதவு திறந்திருந்தது. மெதுவாக அவன் அதைத் தாண்டி உள்ளே சென்றபோது அவன் உடல் வியர்த்துக் கொட்டியது. காரணம் தெரியாத தயக்கமும் தலைகாட்டியது. மண்ணெண்ணெய் விளக்கின் மங்கலான தீப ஒளி வீடெங்கும் பரவியிருந்தது. வாசற் கதவு உட்கதவு எல்லாம் திறந்திருந்தது. ஆனால் உள்ளே மனுஷ நடமாட்டமே அவனுக்குத் தெரியவில்லை. வாசற்புறம் நின்று கொண்டு, தான் போகும்போதும் வரும்போதும் பார்க்கும் அந்தப் பெண் எங்கே? சிறிது நேரம் மௌனமாயிருந்து விட்டு, 'ஸார்!' என்று கூவினான் ராமலிங்கம். பேச்சே இல்லை. 'ஸார்! ஸார்! ஸார்!'— ஊஹூம்! உள்ளே மனிதர்களே இல்லையா? எல்லாரும் வெளியிலே போய் விட்டார்களா?

திடீரென்று உள்ளேயிருந்து விநோதமான அரவம் கேட்டது. பாத்திரங்கள் உருளும் சத்தமும், கண்ணாடிகள் உடைபடும் சத்தமும் தொடர்ந்து வந்தது. "உம்! இங்கே என்ன வேலை? போ, வெளியே! போகாவிட்டால் உன்னைக் கொன்று விடுவேன்" என்ற குரல் உள்ளேயிருந்து கேட்கவே, ராமலிங்கத்தின் தலையில் பெரிய கல்லைத் தூக்கிப் போட்டதுபோ லிருந்தது. அவன் ஒருவாறு சமாளித்துக் கொள்வதற்குள் தொப்பென்று கனமான ஒன்று அவன் மேல் விழுந்தது. விழுந்தது என்ன, ஏன் விழுந்தது என்று அவன் யோசிப்பதற்குள், 'லொள்' என்று ஒரு குரல் கேட்டது. திரும்பிப் பார்த்ததும் தன் மீது விழுந்தது ஒரு நாய்க்குட்டிதான் என்று தெரிந்தது. அது எழுந்து வெளியே பாய்ந்து செல்வதைக் கவனித்தான், உட்பக்கம் திரும்பினான். அங்கே கனகம் நின்றுகொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் பரபரப்பும், லஜ்ஜையும், ஆச்சரியமும் ஒருங்கே அடைந்தவனாய்த் தலையைத் திருப்பிக்கொண்டான்.

ராமலிங்கத்துக்கு இதெல்லாம் கனவில் நடப்பது போலவே இருந்தது. "அப்பா இல்லையா?" என்று கேட்டான் ராமலிங்கம்.

"இல்லை! வெளியே போயிருக்கிறார். நாய்க்குட்டி வீட்டில் அடிக்கிற கொட்டம் சகிக்கவில்லை. ஐயோ, அது ஓடிப்போய் விட்டதே! அதைப் பிடிக்க வேண்டுமே!" என்று பதறினாள். ராமலிங்கம் திரும்பிப் பார்த்தான். நாய்க்குட்டி சற்று தூரம் போய் நின்று கொண்டிருந்தது.

"இதற்குத்தானா பிரமாதம்? இதோ நான் பிடித்துக்கொண்டு வருகிறேன்" என்று தெருவுக்குச் சென்றான்.

"இந்தா, வா, வா!" என்று கூப்பிட்டான் நாயைப் பார்த்து விரலைச் சொடுக்கிக் கொண்டு. அது அவனது அன்பான குரலை லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. மறுபடியும் அது தெருவழியாக ஓட்டமாக ஓட ஆரம்பித்தது.

"ஐயோ! நாய்க்குட்டி!" என்றாள் கனகம்.

ராமலிங்கம் அதை எப்படியாவது பிடித்துக்கொண்டு வந்து அவள் எதிரே நிறுத்தி விடவேண்டும் என்று தீர்மானித்தான்.




"நான் இந்த ஊருக்குப் புதிசு. பீம விலாஸ் காப்பி ஹோட்டல் எங்கே இருக்கு?"
"நான் அது மாதிரி கேள்விப்பட்டதே இல்லையே!"

---

நாயைப் பின் தொடர்ந்து சென்றான் ராமலிங்கம். மிகவும் பரபரப்படைந்தவனாய்க் கனகமும் பின்னால் சென்றான். அதற்குள் நன்றாய் இருட்டத் தொடங்கி விட்டது. நாய் சிறிது தூரம் சென்று நிற்பதும், ராமலிங்கம் பிடிக்கப் போகும் போது அது ஓடுவதுமாய் வெகுதூரம் அவனை அழைத்துக் கொண்டு வந்து விட்டது.

ஊருக்கு வெளியே ஒரு பட்ட மரம். அதனருகில் ஒரு பழைய வீடு இருந்தது. நாயின் ஓலத்தையும், அதன் கழுத்திலுள்ள சதங்கை ஒலியையும் தவிர எங்கும் அமைதி நிலவியது. "இது மகா தரித்திரம் பிடித்த நாயாக இருக்கும் போலிருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டான் ராமலிங்கம்.

"ஆமாம், நாய்க் குட்டியைப் பிடிக்க முடியாதென்று நான் அப்பவே சொல்லவில்லையா? இது அந்தப் பிசாசு பிடித்த வீட்டுக்குள்ளே போய்விட்டால் என்ன செய்கிறது? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!" என்ற கலங்கிய குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான் ராமலிங்கம். கனகமும் அவன் கூடவே பின்னால் வந்து கொண்டிருக்கிறான் என்று அப்பொழுதுதான் அவனுக்குத் தெரிந்தது.

பிசாசு பிடித்த வீடு! திக்கென்றது ராமலிங்கத்துக்கு. பல தடவை அந்த இடிந்த வீட்டை அவன் பார்த்திருக்கிறான். எப்பொழுதுமே பேய் பிசாசுகளை அவன் நம்புவதில்லை என்றாலும் அந்த வீட்டைப் பார்க்கும் போது அவன் வயிற்றைக் கலக்கத்தான் செய்தது; கனகத்துக்காக என்ன வேண்டுமானாலும் செய்யலாம்; அரிய பெரிய காரியங்களைச் செய்து முடிக்கலாம். அவனுக்கும் எவ்வளவோ பெருமையாக இருக்கும். கேட்கிறவர்களுக்கும் நன்றாயிருக்கும். நாயைத் தூக்கிக்கொண்டு வந்து அந்தப் பாழடைந்த வீட்டுக்குள்ளே போவது என்றால் கேட்கிறவர்கள் அவனைப் பற்றி என்ன நினைப்பார்கள்!

'ஜல்! ஜல்!' என்று சதங்கை ஒலி கேட்டது. அந்த நாய்க்குட்டி கனகம் எதிர் பார்த்தபடியே அந்தப் பாழடைந்த வீட்டுக்குள்ளே நுழைந்து விட்டது. வீட்டுக்குள்ளேயிருந்து மறுகணம், நாயின் ஊளையும் குரைப்பும் கேட்டது.

"அதைப் பிடித்துத் தர மாட்டீர்களா? பிசாசு என்று சொன்னேனே, அதனால் இந்த வீட்டுக்குள்ளே போகப் பயமாயிருக்கிறதா?" என்றான் கனகம்.

ஒரு கணம் அமைதி நிலவியது.

"பிசாசு என்கிறாயே, அது என்ன? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்றான் ராமலிங்கம்.

"ஆமாம்; அது ஒரு பெரிய கதை! பாவம், இப்பொழுதுகூட சங்கரலிங்கம் பிள்ளை ஆவி ரூபத்தில் இந்த வீட்டில் உலாவுவதாகச் சொல்கிறார்கள். இரவு வேளையில் 'ஒன்று, இரண்டு, மூன்று' என்று சத்தம் கேட்பதாகச் சொல்லுகிறார்கள். பாவம்; நல்ல மனுஷர். அவருக்கு இந்த கதி ஏற்பட வேண்டாம்" என்றான் கனகம்.

"எல்லாம் விசித்திரமாக இருக்கிறதே! சங்கரலிங்கம் பிள்ளை யார்? எதற்காக அப்படி உலாவுகிறார்?" என்று கேட்டான் ராமலிங்கம்.

கனகம் பின்வருமாறு அந்தக் கதையைச் சொல்ல ஆரம்பித்தான்:

* * *

சங்கரலிங்கம் பிள்ளை என்பவர்தான் என் பாட்டனார். ஏராளமான சொத்து அவருக்கு இருந்தது. முதல் மனைவிக்கு வெகு காலமாகக் குழந்தைகளே இல்லாததினால் இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டார். அதிலிருந்து அவருக்குச் சனியன் பிடித்தது.

இரண்டு மனைவிமார்களுக்குள் ஓயாமல் சண்டை நடக்க ஆரம்பித்தது. பாட்டாவுக்கு மத்தியஸ்தம் செய்வதிலேயே கொஞ்ச நஞ்ச பலமும் போய் விட்டது.

இளையாள் மகா பொல்லாதவள். தம்பியின் தூண்டுதலின் பேரில் வீட்டிலுள்ள நகை, நட்டுகளிலிருந்து தட்டு முட்டுச் சாமான்கள் வரை ரகசியமாக விற்றுப் பணம் சேர்க்க ஆரம்பித்தாள். எவ்வளவோ

நல்லவனாயிருந்த மூத்தவனும், சாமான்களை எடுத்து விற்று அவனும் பணம் சேர்க்க ஆரம்பித்தான். விரைக் கோட்டைக்குள் எலி புகுந்தது போல் வீட்டில் இரண்டு பேருமாகச் சேர்ந்து துவம்சம் செய்ய ஆரம்பித்தார்கள். பாட்டாவுக்கு இதை யெல்லாம் பார்த்து மனம் சோர்ந்து விட்டது.

காலையில் அவர் வீட்டை விட்டுப் போனால் சாயங்காலம் திரும்பி வருவதற்குள் வீட்டையே தூக்கிக்கொண்டு போய் விடுவார்களோ என்று பயம். ஆகவே சாயங்காலம் வீட்டுக்கு வந்ததும், வீடு பத்திரமாயிருக்கிறதா என்று தொட்டுப் பார்ப்பார். சாமான்கள் எது எது காணவில்லை யென்று சோதனை போடுவார். நெற் குதிருக்குப் போய் நெல் எதாவது குறைந்து போயிருக்கிறதா என்று அளந்து பார்ப்பார்.

'ஒன்று, இரண்டு, மூன்று' என்று கலம் கலமாக நெல்லை வெகுநேரம் அளந்து கொண்டிருப்பார். அவர் கடைசிக் காலம் பூராவும், 'ஒன்று, இரண்டு' என்று நெல் அளந்து கொண்டிருப்பதற்கே சரியாயிருந்தது. பத்துக் கலம், எட்டுக் கலம் என்று நெல் குறைந்து விட்டால், மனைவிமார்களைச் சண்டை பிடிப்பார்.

இதே எக்கத்திலேயே பாட்டா இறந்து விட்டார். பருவதனை விஷம் வைத்துக் கொன்று விட்டதாக மூத்தாளும் இளையாளும் ஒருவரை யொருவர் குற்றம் சாட்டிக் கொண்டார்கள். பாட்டா இறந்ததும் இரண்டு பேரும் அவரவர் ஊருக்குப் போய் விட்டார்கள். ஆனால் பாட்டாவின் ஆவி இன்னும் இந்த வீட்டில் உலாவுகிறதாகச் சொல்லுகிறார்கள். அவர் ஆவி ரூபத்தில் அடிக்கடி நெல் அளக்கிறது. போவதும் சிலர் பார்த்திருக்கிறார்களாம் 'ஒன்று, இரண்டு, மூன்று' என்று அவர் நெல் அளக்கிற சத்தம் கூடச் சில வேளைகளில் காதில் விழுமாம்!

• • •

ராமலிங்கத்தின் தலை சுழல்வது போலிருந்தது. நாய்க் குட்டியின் குரைப்புச் சத்தம் இன்னும் அவன் கலக்கத்தைப் பெரிதாக்கியது.

“ஐயோ! எப்படியாவது நாய்க் குட்டியைப் பிடிக்க வேண்டுமே! நாய்க் குட்டியில்லாமல் ஒரு நிமிஷம்கூட என்னால் இருக்க முடியாது. உங்களுக்குப் பிடித்துக் கொண்டுவர பயமாயிருந்தால் நானாவது போய்......!”

ராமலிங்கம் தயக்கத்துடன் வீட்டை நோக்கிச் சென்றான். ஆனால் அவன் கால்கள் பின்னுக்கு இழுத்தன. ஒருவாறு சமாளித்துக்கொண்டு உள்ளே போனான்.

ஹிருதயம் சம்மட்டியால் அடிப்பதுபோல் துள்ளிக் குதித்தது. நாய்க் குட்டி எங்கேயிருக்கிறதென்று தேடினான். சத்தம் மேலேயிருந்து வந்தது. மாடியில்தான் இருக்கிறது என்று தெரிந்து கொண்டதும், தைரியத்தை எல்லாம் வரவழைத்துக் கொண்டு அந்தப் பாழடைந்த வீட்டின் மாடிப் படிக்கட்டுகளில் ஏறினான்.

மாடியில் அவன் கண்ட காட்சி அவனைத் தூக்கி வாரிப் போட்டது. ஒரு கணம் ஆகாயத்தில் மேலே மேலே வெகு தூரம் போவது போலும், பிறகு அதன் பாதாளத்துக்குத் தள்ளப்படுவது போலும் இருந்தது.

மாடியில், அவனுக்குச் சற்று தூரத்தில் வெள்ளை வெளேரென்று தூய ஆடை தரித்த ஒரு முது கிழவர், 'ஒன்று இரண்டு, மூன்று' என்று சொல்லிக்கொண்டே நெல் அளந்து கொண்டிருந்தார்! அவருக்குச் சற்றுத் தூரத்தில் நாய்க் குட்டி நின்று கொண்டு வாலை ஆட்டிக் கொண்டு குரைத்தது.

கீழே விழாமல் இருப்பதற்காகச் சுவரைப் பிடித்துக் கொண்டான் ராமலிங்கம்! மறு கணம் ஆவேசம் வந்தவனைப்போல் கண்ணை



மே மாதம் 8-ம் தேதியன்று சென்னை தென்னிந்தியக் கிளப்பின் வருஷாந்திரக் கொண்டாட்டத்தில் குமாரி பிரேமாவின் நாட்டியக் கச்சேரி விமரிசையாக நடைபெற்றது. மேலே விருப்பது சிவ தாண்டவ நிருத்தியக் காட்சி.

மூடிக்கொண்டு ஓட்டமாக ஓடி நாய்க் குட்டியைக் குண்டுக் கட்டாகக் கட்டித் தூக்கிக்கொண்டு, 'தடதட' வென்று படிகளில் இறங்கி, கனகத்தின் எதிரே வந்து 'தொப்' பென்று கீழே போட்டான். அவன் உடம்பு வெட வெட வென்று நடுங்கிக் கொண்டிருந்தது. பேச நா எழவில்லை.

'ஜில்' லென்ற ஸ்பரிசம் பட்டது அவன் மேல். அந்தக் கணத்தில் அவன் உடம்பெல்லாம் சிலிர்த்தது.

"ஐயோ, உடம்பு நடுங்குகிறதே! ஐயோ, பாவம்" என்று கதறினாள் கனகம்.

"ஒன்றுமில்லையே!" என்று பொய் சொன்னான் ராமலிங்கம்.

இருவரும் திரும்பி வீட்டுக்கு வந்தார்கள். "இன்றைக்கு எங்கள் வீட்டிலேயே சாப்பிடலாம். வாருங்கள்" என்றாள் கனகம்.

மேற்படி சம்பவம் நடந்த பத்து நாளைக்கெல்லாம் ராமலிங்கத்துக்கும் கனகத்துக்கும் தடபுடலாகக் கல்யாணம் நடந்தது.

ஒரு நாள் திருமுருகாற்றுப் படையில் கனகத்துக்கு ஏதோ சந்தேகம் வரவே, புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு ராமலிங்கத்தின் அறைக்குப் புறப்பட்டாள். உள்ளே ஏதோ பேச்சுக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு நின்றாள்.

"தாத்தா! உங்கள் யுக்தியே யுக்தி. உங்களுக்கு எப்படி நன்றி செலுத்துவது என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. என் விஷயத்தில் இவ்வளவு தூரம் சிரத்தை யெடுத்துக் கொண்டிருக்கா விட்டால் இந்தக் கல்யாணம் நடந்திருக்காது."

"உன்னை மட்டுமில்லாமல் என் பேத்தி கனகத்தை உத்தேசித்துத்தான் இந்த யுக்தி செய்தேன். அவளோ தமிழ்ப் புத்தகங்களையெல்லாம் படித்துவிட்டு வீரனும் சூரனுமான ஆசாமியைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று வெகு காலமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாள். நீ இந்த ஊருக்கு வந்ததிலிருந்து இரண்டு பேரும் ஒருவரை யொருவர் கவனிப்பது எனக்குத் தெரியாமல் இல்லை. உங்கள் இரண்டு பேரையும் சேர்த்து வைப்பது எப்படியென்றுதான் எனக்குத் தெரியவில்லை. அவள் மனத்தில் நீ மகா தைரியசாலி என்று பட்டால்தான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்வாள் என்பது எனக்குத் தெரியும். 'மிட்டாதாரை எப்பொழுது பார்க்கலாம்' என்று அன்று காலையில் கேட்டபோது, பளிச்சென்று ஒரு யோசனை தோன்றிற்று. உன்னைச் சாயங்காலம் வரச் சொல்லிவிட்டு, இந்த நாயையும், பழைய வீட்டையும் வைத்துக்கொண்டு ஒரு பிசாசுக் கதை தயாரித்தேன்.

நீ வீட்டுக்கு வந்ததும் நாயை அவிழ்த்து விடும்படி கனகத்திடம் முதலிலேயே சொல்லி வைத்திருந்தேன். நாய் நேரே என்னைத் தேடிக்கொண்டு பழைய வீட்டுக்கு வரும் என்பது எனக்குத் தெரியும். அப்பொழுது உன்னை வீட்டு நாயைப் பிடிக்கச் சொல்லி, அந்தச் சமயத்தில் கதையைச் சொல்லி உன் தைரியத்தைப் பரிசோதித்துப் பார்க்கும்படி சொன்னேன். அவளும் நன்றாகத்தான் கதையைச் சொன்னாள். நீயும் நன்றாகத்தான் நடித்தாய். ஆனால் அதே கதையை முதலில் உன்னிடம் சொல்லி வைத்திருக்கிறேன் என்பது கனகத்துக்குத் தெரியாதிருக்காது......"

"எனக்கு அப்பொழுதே தெரியும் தாத்தா!" என்ற குரலைக் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

கனகம் எதிரே நின்று கொண்டிருந்தாள்.

"எப்படி?" என்றார் தாத்தா.

"இரண்டு மூன்று தடவை கையில் பிடிபடவிருந்த நாயை இவர் வேண்டுமென்றே பழைய வீட்டைப் பார்க்கத் துரத்தித் துரத்தி விட்டதிலிருந்தே 'உங்கள் திட்டத்தை இவரிடமும் சொல்லிவிட்டீர்கள்' என்று ஊகித்துக் கொண்டேன்" என்றாள் கனகம்.

"அதேமாதிரி உன் பிசாசுக் கதையும் பொய் என்று — முதலிலேயே தாத்தா சொல்லாவிட்டால்கூட — நான் தெரிந்து கொண்டிருப்பேன்."

"எப்படி?" என்றார் தாத்தா.

"நிஜமாகவே பிசாசு என்று ஒன்று இருந்து, அதுவும் இந்த வீட்டில் நடமாடுவதாக இருந்தால் ஒருநாளும் நீ என்னை அந்த வீட்டுக்குள் போய் நாயைப் பிடித்துக் கொண்டு வரச் சொல்லியிருக்க மாட்டாய். என்னை வீட்டுக்குள் போகச் சொன்னதிலிருந்தே அங்கே பிசாசும் இல்லை, மண்ணாங்கட்டியும் இல்லை என்று தெரியவில்லையா?" என்றான் ராமலிங்கம்.

"பலே பேஷ்! இரண்டு பேரும் நல்ல ஜோடிதான்" என்று தாத்தா சொல்லும்போது, கனகம் வெட்கத்தால் தலை கவிழ்ந்தாள்!



# பரீட்சை முடிவு

ராஜ்

தாமு வகுப்பிலேயே முதல் பையன். அவனைக் கண்டால் பையன்களுக்கெல்லாம் ஒருவிதக் கோபம். பாக்கிப் பேர் பரீட்சையில் நிறைய மார்க்கு வாங்குவதை அவன் தடுக்கவில்லையென்றாலும் எல்லா மார்க்கையும் அவனே அடித்துக் கொண்டு போய் விடுகிறான் என்று மற்ற மாணவர்கள் கருதினார்கள். அவன் தலையை அழகாகச் சீவி விட்டுக் கொண்டு, முகத்தில் படிப்புக் களையுடனும், ஒருவருடைய ஜோலிக்குப் போகாமல் தான் உண்டு தன் படிப்பு உண்டு என்று இருப்பான். இருந்தாலும் மற்ற பையன்கள் அவனைச் சும்மா இருக்க விடாமல் பரிகசித்துக் கொண்டும், அவனுக்கு ஏதாவது தொந்தரவு பண்ணிக் கொண்டும் இருப்பார்கள். ஆனால் தாமு ஒன்றையும் லட்சியம் செய்யாமல் கணக்கில் "கனை கனை"யாக மார்க்கு வாங்கிக்கொண்டு வருவான்; இதில் என்ன வேடிக்கை என்றால், கணக்கு உபாத்தியாயர் கடுவன் பூனை என்றாலே பையன்களுக்கெல்லாம் நடுக்கம். ஆனால் தாமு ஒருவன் மட்டும் அவருக்குப் பயப்பட்டாலும் அவர் கணக்குக்குப் பயப்படாமல் இருந்தான்.



பரீட்சையும் வந்தது. பையன்களும் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள் தாமுவைப் பழி வாங்க. கணக்குப் பரீட்சை முடிந்து வெளியில் வந்ததும், தாமு தன் விடைகளை எல்லோரிடமும் ஒப்பிட்டுப் பார்த்தான். ஒருவர் விடையாவது இவன் விடைக்குச் சரியாக இல்லை.

"நீ போட்ட கணக்கு ஒன்றுகூடச் சரியாயில்லை. பரீட்சையில உனக்கு மார்க்கு வெறும் பூஜ்யம்தான்" என்றான் ஒருவன்.

"வெறும் பூஜ்யம் இல்லேடா, ரொம்ப ரொம்பப் பெரிய ஸைபர்!"

"இந்த மாம்பழம் அவ்வளவு பெரிசு இருக்குமா?"

"இல்லையடா! கணக்கு வாத்தியார் ஸைபர் போட்டால் குறைந்தது தேங்காய் அளவாவது இருக்கும்!"

இப்படியாக எல்லோரும் இவனைப் பயமுறுத்திவிட்டார்கள். தாமுவுக்கு அழுகை வந்து விட்டது. இந்தமாதிரி எப்பொழுதும் அவனுக்கு வேறு மாதிரி விடை வந்ததே கிடையாது. முன் தடவைகளில், விடைகளை மற்றப் பையன்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது குறைந்தது நாலைந்து கணக்குகளுக்காவது ஒரே மாதிரி விடை வரும். இப்பொழுது ஒரு கணக்குக்குக் கூட விடை சரியாக இல்லையே? என்ன செய்கிறது. பரீட்சையில் தோற்று விட்டால் அப்பா என்ன சொல்லுவார்? தாமுவும் என்ன செய்வது என்று தெரியாமல் விழிக்கையில் சில பையன்கள், "தாமு! பயப்படாதேடா, வாத்தியாரிடம் போய்க் கொஞ்சம் பார்த்துக் கொள்ளச் சொல்லு: நீதான் அவருக்கு வேண்டியவன் ஆயிற்றே!

"மார்க்குப் போட்டு விடுவார்" என்றார்கள்.

நிஜந்தான் என்று நம்பி, தாமுவும் கணக்கில் எப்படியாவது மார்க்கு வாங்க வேண்டும் என்று உபாத்தியாயர் வீட்டிற்குச் சென்றான். உபாத்தியாயர் அப்பொழுதுதான் விடைகளைத் திருத்திக் கொண்டிருந்தார். தாமு எதிரில் நிற்பதை அவர் கவனிக்கவில்லை. தாமுவின் உடம்பு நடுங்கிற்று. கணக்கு விடையைத் திருத்தியிருப்பாரோ, ஒரு வேளை அவர் கையிலுள்ள விடை தன்னுடையதுதானோ?

நிமிர்ந்து பார்த்தார் உபாத்தியாயர். எதிரே தாமு நிற்பதைப் பார்த்து, "உன்னை யாரடா இங்கே வரச் சொன்னது? பேப்பர் திருத்துகிற இடத்திற்கு வரக் கூடாது என்பது தெரியாதா?" என்று சீறினார்.

அவரிடம் மிகவும் பயந்துகொண்டே நடந்ததைச் சொல்லித் தன்னைக் கவனித்துக்கொள்ளும்படி சொன்னான் தாமு. வந்தது கோபம் உபாத்தியாருக்கு; எடுத்தார் தாமுவின் விடைக் காகிதத்தை. "பயலே! உனக்கு மார்க்கு தானே வேண்டும். இதோ பார்" என்று அவன் பேபரில் ஒரு பெரிய சைபராகப் போட்டு விட்டு "ஓடு" என்றார்.

இதைப் பார்த்த தாமு அழுது விட்டான். இரகசியமாக இதைப் பார்த்துக் கொண்டிருந்த பையன்களுக்கு ஓர் அலாதி சந்தோஷம். "தொலைந்தான் தாமு! வந்தது அவன் கணக்குக்கு ஒரு கோழிமுட்டை!" என்று சந்தோஷப் பட்டார்கள். தாமுவும் வீடு போய்ச் சேர்ந்தான்.

விடுமுறைக்குப் பிறகு பள்ளிக்கூடம் திறந்தார்கள். கணக்கு வாத்தியார் பேபர் கட்டைக் கொண்டு வந்து மேஜைமேல் வைத்தார். ஒவ்வொரு பையன்களுக்கும் பேப்பரைக் கொடுத்தார். எல்லாம் ஒரே "சைபர்". கடைசியாக "தாமு" என்று கூப்பிட்டு அவன் பேபரைக் கையில் கொடுத்தார். பையன்கள் ஒரு பெரிய சைபரைப் பார்த்தார்கள். ஆனால் உபாத்தியாயர் "இந்தா உனக்கு 100க்கு 100" என்று சொல்லிக் கொண்டே கொடுத்தார். அந்தப் பெரிய சைபருக்குள் 100க்கு 100 போட்டிருந்தது. தாமுவுக்குச் சந்தோஷம். பையன்களுக்கெல்லாம் ஏமாற்றம். கடுவம் பூனையும் புன் முறுவல் பூத்தார்.












# இ. ஸி. ஸ்கூல்

## திருவனந்தபுரம்

•

உங்கள் வீட்டிலிருந்து கொண்டே உங்கள் ஜோலிகளுக்கு இடையூறு எதுவுமின்றி ஓரே வருடத்தில், ஏ. பி. ஸி. முதல் தொடங்கி ஆங்கிலத்தில் நாலாவது பார அறிவு பெறலாம். தொடர்ந்து பயிலின் மூன்றே வருடங்களில் ஸீனியர் கேம்பிரிட்ஜ், மெட்ரிக்குலேஷன் முதலிய பரீட்சைகள் தேறலாம். இடையில் பாடசாலைகளில் கல்வி நிறுத்தியவர் தொடர்ந்து பயிலலாம். பேராசையுடையாரும், அவசியமுள்ள செலவும் பிரயத்தனமும் செய்ய சக்தியுள்ளாரும் தாங்கள் கடைசியாகக் கற்ற வகுப்பைக் காட்டி விபரங்கட்கு மேற்காணும் விலாஸத்திற்கு எழுதவும்

---




**P.A. ராஜு செட்டியார் & பிரதர்**

கடை வீதி. "ஸ்வர்ண மாளிகை" கோயமுத்தூர்.

தந்தி. "ராஜா"..... தபால் பெட்டி. 139. .......போன். 218.A



# வள்ளுவர் வாழ்க!

ஸ்ரீ சுத்தானந்த பாரதி

ஐயர், கப்பலும் வள்ளுவருமாயிருந்தார். அரசியல் மும்முரமெல்லாம் ஆடி அடங்கி விட்டது. அப்படியிருந்தும் சம்சயாத்மாக்களுக்கு நிம்மதியில்லை. போதாக் குறைக்கு 1914 நவம்பரில், எம்டன் வந்து வங்காளக் கடலில் திருவிளையாடல் நடத்தியது. இந்தப் போரில் கிராப்ஸ்பீ நடத்திய விளையாடலை எம்டன் கொஞ்சம் பஞ்சமன் வாரத்தில் நடத்திய தென்னலாம். ஆனால் அந்தக் காலத்தில் எம்டன் குண்டு என்றால் கலாட்டாவாயிருந்தது.

இந்தச் சமயம் போலீஸார் ஐயரைக் குறி வைத்தனர். அவருடன் இன்னும் சில தேச பக்தர்களையும் 'அபாயப்பேர்வழிகள், எம்டன் வேலையில் இவர்களும் சேர்ந்து நட்டா மாலை சுற்றினால் பிசகு' என்றனர் போலீஸார். "மெய்தான்; என்ன செய்யலாம்?" என்று அதிகாரிகள் சிந்தித்தனர்.

"புதுச்சேரியை விட்டே இவர்களை அனுப்பிவிட வேண்டும்."

"சரி, எங்கே?"

"கண்காணாத இடத்துக்கு!"

"எந்த இடத்துக்கு?"

"அல்ஜீரியாவுக்கு."

தீர்மானமாய்விட்டது. ஒற்றர் ஐயர் வீட்டை நகலிக் கொட்டுகிறார்கள். "ஐயரே! மூட்டை தயாராகட்டும்! அல்ஜீரியாக் கப்பல் வந்ததும் ஏற வேண்டும்" என்றனர் அதிகாரிகள்.

ஐயர் அஞ்சவில்லை. ஆனால், "ஜன்ம பூமியைவிட்டு தேச சேவை செய்யாமற் போகிறோமே" என்று கலங்கினார். சிறிது சிந்தித்தார். உடனே குறளை எடுத்தார். "போகிறது போகிறோம். நமது பெயரும் தமிழின் பெயரும் உலகில் நிலைக்கும்படி ஒரு காரியம் செய்துவிடுவோம்" என்று பேனாவைப் பிடித்து மின்னல் வேகத்தில் எழுதினார். ஐயர் ஆங்கிலத்தில் வெகு விரைவாக எழுதுவார். பேனாவை நாட்டினால் அதி விரைவாக அது காகிதத்தை உழுது மறு பக்கத்தைத் தள்ளிக்கொண்டே நிற்கும். ஐயர் திருக்குறள் முழுவதையும் வைபின் கடையில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து முடித்தே எழுந்தார்.

"நமது காரியம் முடிந்தது" என்னும் போதே அல்ஜீரியாக் கப்பல் புதுவை வரும் தகவல் கிடைத்தது. ஐயர் சிந்தித்தார். சட்டத்தைப் புரட்டினார். உடனே பிரெஞ்சு சர்க்காருக்கு எழுதினார். "நாங்கள் தங்கள் கட்டளைப்படி நடக்கத் தயார். ஆனால் நாங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை. இங்கே அமைதியாகக் குடும்பத்துடன் இலக்கியப் பணியே செய்து வாழ்கிறோம். நீங்கள் பலாத்காரமாக எங்களைக் கப்பலேற்றுகிறீர்கள். போகிறோம அல்ஜீரியாவுக்கு. ஆனால், எங்கள் செலவுக்கு நீங்கள் உடனே இருபதினாயிரம் ரூபாய் முடைப்பாகத் தரவேண்டும். இன்ன செக்ஷன்படி இதைக் கேட்கிறோம்."

பார்த்தார் புதுவை கவர்னர். ஆசாமி விழித்த பேர்வழி என்று அறிந்தார். ஐயரை வரவழைத்துப் பேசினார். ஐயரின் கீர்த்த நடையும், தெளிந்த அறிவும் சட்ட மேதையும் கவர்னரை வசப்படுத்தின.

"சரி, நீங்கள் அமைதியாயிருங்கள். உங்களால் ஒரு அபாயமும் வராது" என்று அனுப்பினார். ஐயரிடம் பிரெஞ்சு கவர்னருக்குப் பெருமதிப்பு உண்டு. அல்ஜீரியாக் கப்பலும் புறப்பட்டு விட்டது. எம்டனும் இதற்குள் சிங்கப்பூருக் கருகே சமாப்தியாகிப் பாதாள யாத்திரை சென்றுவிட்டது. நமக்கும் திருக்குறள் ஆங்கிலம் கிடைத்தது. ஐயரும், "வள்ளுவர் வாழ்க!" என்றார்.

# ப்ளாண்டர்ஸ்

## நீலகிரி தேயிலை






பிரபலமானதும், ருசியுள்ளதும், கரு
கருப்பு அளிக்கக் கூடியதுமான
ப்ளாண்டர்ஸ் காங்கோ, பாமலி மிக்சர்,
ரகங்கள் இனிமை அதிக பிரபலமடைந்து
வருகின்றன. உங்களுக்கு சிக்கன
மும், உயர் ரகமும் சேர்ந்து இருக்க
வேண்டுமானல் இந்த இரண்டு பிரபல
ரகங்களை விட வேறு கிடையாது.
ஏனெனில் அவைகள் தான் நித்திய உபயோகத்துக்கான ரகங்கள்.

இன்றே இந்த உயர்தரமான ரகங்களை தெரிந்து கொள்ளுங்கள்.

---

**ஸ்ரீ ப்ளாண்டர்ஸ் கம்பெனி லிட்.,**

கூடலூர், நீலகிரி, தென் இந்தியா. PK-15.T.M.

# காலக்ஷேபம்

### முடியாது

கிட்டு (தன் ஆத்ம நண்பன் ராமுவைப் பார்த்து):— உன்னிடம் 2,000 வீடுகள் இருந்தால் அதில் எனக்குப் பாதி தருவாய் அல்லவா?

ராமு:—சந்தேகமென்ன? கட்டாயம் தருவேன்!

கிட்டு:—உன்னிடம் 50 லட்சம் ரூபாய் இருந்தால் எனக்கு அதில் பாதி தருவாய் அல்லவா?

ராமு:—கட்டாயம் தருவேன்.

கிட்டு:—உன்னிடம் இரண்டு மாடுகள் இருந்தால் எனக்கு ஒரு மாடு தருவாய் அல்லவா?

ராமு:—அது முடியாது.

கிட்டு:—ஏன்?

ராமு:—இரண்டு மாடு இப்போது என்னிடம் இருக்கிறது!—வே. பக்தவத்சலம்.

★

### விசேஷம்தான்

ராமு:—ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்!

ராஜு:—நேற்று இரவு என் வீட்டில் ஒரு திருடன் புகுந்து என் கடியாரத்தைத் திருடிக் கொண்டு போய்விட்டான்.

ராமு:—உன்னுடைய நாய் என்ன செய்து கொண்டிருந்தது? அவனைப் பார்த்துக் குரைக்க வில்லையா?

ராஜு:—இல்லை; அவன் நாயையும் சேர்த்தல்லவா திருடிக்கொண்டு போய் விட்டான்! —எஸ். வைத்தீசுவரன்.

★

### நல்ல காரணம்

ஜவுளிக்கடை முதலியார் (மனைவியிடம்):—இன்றைக்குப் பூராவும் அடுத்த கடையில் துணி மணி எதுவும் எடுத்து விடாதே! சொல்லி விட்டேன்.

மனைவி:—ஏன்?

முதலியார்:—அவர்கள் நம்முடைய கடைக் கஜக் கோலை இரவல் வாங்கிக் கொண்டு போயிருக்கிறார்கள்! —ராஜா.

### ஆச்சரியம்!

சாப்பிடுபவர் (சிப்பந்தியிடம்):— ஒரு பிளேட் பால்கோவா கொண்டு வா.

சிப்பந்தி:—ஸார்! பால் கண்ட்ரோலினால் இப்பொழுது பால் சம்பந்தமான வஸ்துவைச் செய்யக்கூடாது என்று சட்டம் வந்திருப்பது உமக்குத் தெரியாதோ?

சாப்பிடுபவர்:—தெரியும் அப்பா! அப்படியானால் நீங்கள் பால்கோவாவைப் பாலைக் கொண்டுதான் செய்கிறீர்களா, என்ன?

—பாலு.

★

### தெரியாத காரணம்

கணவன்:—நேற்றிரவு நல்ல மழை பெய்ததாமே?

மனைவி:—ஆமாம், இடி யிடித்து மழை பெய்தது.

கணவன்:—இடி யிடித்தா? என்னை ஏன் எழுப்பவில்லை? இடி யிடித்தால் எனக்குத் தூக்கம் வராதென்று உனக்குத் தெரியாதா? —வி. ஆர். மைதிலி.

★

### வேண்டியது!

வைத்தியர்:—உங்களுக்கு வேண்டியது நல்ல காற்றும், தேகாப்பியாசமும்தான். இதோ, இந்தப் புஸ்தகத்தில் சுகாதாரத்தைப் பற்றி விரிவாக எழுதப்பட்டிருக்கிறது......

நோயாளி:—ஐயோ, நான்தானே அந்தப் புத்தகத்தை எழுதியவன்!

—பி. கே. கிருஷ்ணமூர்த்தி.

★

### யாருக்கு?

ஒருவர்:— என்னடா வாசு, என்னைப் பார்க்காததுபோல் ஒதுங்கிப் போகிறாயே, வெள்ளெழுத்தா என்ன?



மற்றவர்:—தயவு செய்து மன்னிக்க வேண்டும். நான் வாசு இல்லை!

—கே. ஆர். ராமசுப்ரமணியன்.



# இந்தியாவிற்கு உதவுங்கள்

**பொருட்களை மிதமாகச் செலவிட்டு, அவை தாராளமாய்க் கிடைக்கும் படிச் செய்யுங்கள்.**

## இதோ அதற்கு வழி!

உங்களுக்கு சொந்தமாயுள்ளவை அல்லது நீங்கள் உபயோகப் படுத்துபவை யாவற்றையும், கூடுமான காலம் உழைக்கும்படிச் செய்யுங்கள். சிக்கனமாக இருப்பது நாகரீகமட்டு மல்லாமல், நாட்டுப் பற்றுடையவரின் கடமையுமாகும். தேவைப் பொருளின் நெருக்கடியை தவிர்க்க நீங்கள் உதவினாலொழிய, இந்தியாவின் ஏழை மக்கள் கஷ்டப் படத்தான் செய்வார்கள்.

சொந்த அனுபவத்தைக் கொண்டு பார்த்தாலும் முறைப்படி சிக்கனத்தைக் கையாண்டு வந்தால் முறைப்படி சிறிது தொகை மிச்சமாகும். நீங்கள் செலவு செய்யாத ரூபாய்கள், சேமிப்பில் சேர்த்து பெருகிவிடும்.




**1** வேண்டாத சமயங்களில் விளக்குகளையும் விசிறிகளையும் நிறுத்தி வையுங்கள்.



**2** கொட்டிக் கொண்டிருக்கும் குழாயை நிறுத்துங்கள். அதிகப்படியான தண்ணீர் வரியை ஏன் செலுத்துகிறீர்கள்?



**3** அதிக விலையுள்ள பரிசுகள் வழங்காதீர்கள்.



**4** வீட்டில் இருப்பதன் மூலம், பணத்தை மிச்சப் படுத்துங்கள்.



**5** பீங்கானுக்குப் பதிலாக உலோகங்களால் செய்யப்பட்ட பாத்திரங்களை உபயோகியுங்கள்



**6** ஒரு வருடத்துக்குப் புதுத் துணி வாங்காதீர்கள்.

## இன்றியமையாதவை தவிர, பிற எதையும் வாங்காதீர்கள்.

இந்திய சர்க்கார் இ. & பி. இலாகா வெளியீடு.





# கம்பர் தரும் காட்சி

## 102. கண்ணீர் பொழிய நின்றான்

டி. கே. சி.

ராமனைக் காணப் போகிறோம் என்ற ஆத்திரத்தில் ஞானியாகிய அகத்தியர் என்னமாய்ப் பேசுகிறார் பாருங்கள்!

* * *

ஞான மார்க்கத்தில் கடவுள் தத்துவத்தைக் காணப் பேரறிவாளர் (பிரம்மா போன்ற பேரறிவாளர்) எவ்வளவோ முயலுகிறார்கள். வேதங்களின் உட்பொருள்களையும் வேதங்களோடு சேர்ந்த பிற சாஸ்திரங்களையும் தங்கள் பரந்த அனுபவ ஞானத்தில் வைத்து அழுத்தமாய் ஆராய்கிறார்கள். எவ்வளவோ காலம் விடாது ஆராய்கிறார்கள். அப்படி ஆராய்ந்தும் கடவுள் தத்துவம் கிட்டுவதில்லை. அப்படிக் கிட்டாத பொருளே, அதாவது கடவுளே, தனக்கு முன் வந்து வார்த்தையாடப் போகிறது என்ற உணர்ச்சியில் நிற்கிறார் அகத்தியர்.

இரைத்தமறை நாலினொ(டு)
இயைந்தபிற யா வும்
நிறைத்தநெடு ஞானநிமிர்
கல்லின்நெடு நாள் இட்(டு)
அறைத்தும் அய னாலும்அறி
யாதபொருள், நேர் நின்(று)
உரைக்குதவு மாம்என்னும்
உணர்ச்சியின்உ வப் பான்.

[இரைத்தமறை: உண்மையை எடுத்து வேகத்தோடு சொல்லுகிற மறை நூல்களையும்; இயைந்த பிற யாவும்: அந்த மறை நூல்களோடு சம்பந்தப்பட்ட சாஸ்திரங்களையும்; நிறைத்த நெடுஞானம்: வெகு நாளாக வரிசைப் படுத்தி நிறைத்த அனுபவ ஞானமான; நிமிர் கல்லின்: மலைபோன்ற ஒரு பெரிய குழி அம்மியில்; நெடுநாளிட்டு அரைத்தும்: யுகம் யுகமாக வைத்து அரைத்தும், அதாவது ஆராய்ச்சி செய்தும்; அயனாலும் அறியாத: பிரம்மா போன்ற பேரறிஞர்களாலும் கண்டறியாத; பொருள்: கடவுளாகிய வஸ்து; நேர்நின்று உரைக்கு உதவுமாம்: எனக்கு நேராக வந்து வார்த்தையாடப் போகிறது, அந்த பாக்கியம் எனக்குக் கிட்டிவிட்டது என்று; உணர்ச்சியின் உவப்பான்: மிக்க உணர்ச்சியோடு பரவசமானார்.

குறிப்பு:—கம்பர் சமயக் கலையில் எவ்வளவு தெளிந்திருந்தாரோ அப்படியே மருத்துவம் முதலிய கலைகளிலும் பயின்றிருந்தார். இது பற்றியே அவரைக் 'கல்வியிற் பெரியவர்' என்றார்கள்.]

தேகத்தில் ஒரு நோய் புகுந்து கொள்ளுகிறது. எலும்புக் குள்ளுமே புகுந்து விடுகிறது. சரியான மருத்துவன் வந்தானானால் நோயையும் அதனால் ஏற்பட்ட விஷத்தையும் வேரறக் களைந்து விடுவான். தேகம் ஆரோக்கியம் அடைந்து பல நன்மைகளைச் செய்யவும் அனுபவிக்கவும் வசதி பெறுகிறது.

இது போலவே சமூகமாகிய தேகத்துக்குள் தீயக் கொள்கைகள் பிரவேசித்து அதன் காரணமாக ஒழுக்கம் பண்பாடு எல்லாம் ஒழிந்து போக நேருகிறது. இந்த நோய்வாய்ப் பட்டுக் கஷ்டப்படுகிறது சமூகம். உயர்ந்த லக்ஷியத்தோடு கூடிய மகா புருஷன் ஒருவன் வருகிறான். தவறான கொள்கைகளையெல்லாம் அகற்றுகிறான். உயர்ந்த லக்ஷியங்களை இதயத்தில் பதியச் செய்கிறான். அது காரணமாகச் சமூகத்துக்கு இன்ப வாழ்க்கை எய்த நேருகிறது. இது நமது அனுபவமுந்தான்.

'உய்ந்தனர்இ மைப்பிலர்;
உயிர்த்தனர்த வத் தோர்;
அந்தணர்அ றத்தின்நெறி
நின்றனர்க ளா னார்;
வெந்திறல்அ ரக்கர்விட
வேர்முதல்அ றுப் பான்
வந்தனன்ம ருத்துவன்
எனத்தனிவ லிப் பான்.

[உய்ந்தனர் இமைப்பிலர்: தேவர்கள் பிழைத்தார்கள்—அதாவது உயர்ந்த லக்ஷியத்திலிருப்பவர்கள் பிழைத்தார்கள் — தவ

ஒழுக்கத்திலிருந்த முனிவர்களுக்கு உயிரே போனமாதிரி யிருந்தது—அவர்களுக்கு உயிர் வந்து விட்டது. அந்தணர்: வைதிகத் துறையில் நிற்பவர்கள்; வெந்திறல் அரக்கர்: கொடுமை செய்வதில் திறமையுடைய அரக்கரை — அதாவது நல்ல பண்பாடுகளைக் கெடுக்கும் தீயக் கொள்கைகளைக் கொண்டவர்களை; விட வேர் முதல் அறுப்பான்: சமுதாயத்துக்குள் எங்கெங்கும் புகுந்துள்ள விஷ வேர்களை அடியோடு பிடுங்கி எறியும்படியாக; வந்தனன் மருந்துவன்: தம்மிடை வந்தான் ராமனுயே மருந்துவன்; தனி வலிப்பான்: என்றுமில்லாத உறுதியோடு நிற்கிறார் முனிவர்.

சமூகம் எவ்வளவு கெட்டுப் போயிருந்த போதிலும் உண்மையான வழியங்களை எடுத்துப் பரப்பும் சக்தி வாய்ந்த மகாபுருஷன் ஒருவன் இருந்தால் சமூகம் நிச்சயமாய்த் திருந்திவிடும் என்ற நம்பிக்கையிலிருக்கிறார் கம்பர். இதுபற்றியே உய்ந்தனர், உயிர்த்தனர், நின்றனர்களானார் — என்ற சென்ற கால இலக்கண வழக்கைக் கையாளுகிறார். இதனால் கவிக்கு உறுதிபாவம் ஏற்படுகிறது.]

ராமன் வருவதைக் கண்டு கொண்டார் முனிவர். அவ்வளவுதான்: இதயம் இளகிக் கண்ணீராய்ப் பொழியலுற்றது. அடியெடுத்து வைக்க இயலவில்லை.

கண்டனன் இராமனை
வரக்;கருணை கூ ரப்
புண்டரீக வான்நயனம்
நீர்பொழிய நின் றான்;—
எண்திசையும் ஏழ்உலகும்
எவ்வுயிரும் உய் யக்
குண்டிகையி னில்பொருவில்
காவிரிகொ ணர்ந்தான்.

[கருணைகூர: அன்பினால் மனம் இளக; புண்டரீக வான் நயனம்: தாமரை மலர் போன்ற பிரகாசமான கண்ணிலிருந்து; நீர் பொழிய நின்றான்: ஆனந்தக் கண்ணீர் பொழிய அப்படியே நின்று விட்டான்; எண் திசையும் ஏழ் உலகும் எவ்வுயிரும் உய்ய: விரிவான பிரதேசத்தில் வாழும் உயிர் வர்க்கங்களுக்கெல்லாம் — உணவு ஏராளமாகக் கிடைத்து வாழும்படி; குண்டிகையினிற் பொருவில் காவிரி கொணர்ந்தான்: வெள்ளப் பெருக்கோடு கூடிய காவிரியை கலசத்தில் கொண்டு வந்தவரான அகத்திய முனிவர் நின்றார்.]

குறிப்பு:—அணை தடுக்கும் ஏரி வெட்டியும் உழவுத் தொழிலுக்கு எவ்வளவோ பெரும் உதவி பூர்வ காலத்தில் செய்தவர் அகத்தியர். அதைக் கம்பரும் அனுபவிக்கிறார். அந்த அனுபவம் செய்யுளில் பாவடாக உருவெடுக்கிறது.

எண்திசையும் ஏழுலகும்
எவ்வுயிரும் உய் யக்
குண்டிகையி னில்பொருவிற்
காவிரிகொ ணர்ந் தான்.]

ராமபிரானைக் கண்ட மாத்திரத்தில் அகத்தியர் பட்ட பாடு இது. இனி என்ன நடக்கப்போகிறது? பார்க்கலாம்.

---

## இது என்ன வார்த்தை!

எழுத உபயோகிக்கும் வஸ்துவின் பெயரைக் கொண்டு மனித சமூகத்தின் நாகரிகத்தை அறிய முடியும். 'ஓலை' என்ற தமிழ் வார்த்தையிலிருந்து, நம் முன்னோர்கள் பனை ஓலையைப் பதப்படுத்தி அதன் மேல் எழுதி வந்தார்களென வெளியாகிறது. பிறகு எழுதப்பட்ட விஷயம், நூல் இவைகளுக்கும் ஓலை எனப் பெயர் வந்தது.

'பத்ரம்', 'பத்ரிகா' என்றால் சம்ஸ்கிருதத்தில் 'இலை' என்ற பொருள். ஆரியர்களும் பனை இலையின் மேல் எழுதி வந்ததால் 'பத்ரிகா' என்றால் கடிதம், காகிதம் எனப் பொருள் பட்டது. தற்போது தமிழில் 'பத்திரிகை' என்று தினசரி வெளிவரும் செய்தித் தாள்களைக் குறிக்கிறோம்.



'பேப்பர்' என்றால் புல், கந்தல், குப்பை முதலியவற்றிலிருந்து தற்போது செய்யப்படும் மெல்லிய தாள் எனப் பலர் நினைக்கலாம். ஆனால் கிரேக்கர்கள் 'பபிரஸ்' என்ற ஓர் மரப் பட்டையிலிருந்து தயார் செய்த எழுதும் பொருள்தான் ஆங்கிலத்தில் 'பேப்பர்' என வழங்கப்படுகிறது என்றால், பண்டைய நாகரிகத்தின் ஒற்றுமை ஆச்சரியகரமாக இருக்கிறதல்லவா?

—கே. எஸ். எஸ்.

# குமாஸ்தாக்களுக்கு நல்ல பெறுமதியுடைய பயிற்சி

ராயல் இந்தியன் கடற்படையில் ரைட்டர்களுக்கும், (இந்தியன் தரைப்படை குமாஸ்தாக்கள் பகுதி உட்பட) இந்தியன் தரைப் படையிலும் ராயல் இந்தியன் ஆகாயப் படையிலும் குமாஸ்தாக்களுக்கும் உத்தியோகங்கள் காலியுள்ளன.

இவ்வுத்தியோகங்கள் எதிலும் சரி, நீங்கள் பெறும் அனுபவ ஞானமும் பயிற்சியும் யுத்த பிற்காலம் இந்தியன் வர்த்தகத்துக்கு கட்டாயம் மிகவும் பயன்படும்.

**நல்ல சம்பளம் ★ இலவச உணவு**
**பூராச் சம்பளத்துடன் ரஜா**
**இலவச இடவசதி ★ இலவச சிகிச்சை**
**இலவச உடைகள்**

இந்த உத்தியோகங்களுக்குத் தகுதியுற என்னென்ன யோக்கியதாம்சங்கள் தேவையென்பது பற்றியும் மற்றபடி பூரா விவரங்களுக்கும் கீழ் வரைந்துள்ள ஆபீஸுகளில் உங்களுக்கு மிகவும் அருகிலுள்ள ஆபீஸுக்கு எழுதவும்:—

AAA 137

| | | |
|---|---|---|
| மதராஸ்: | ... | புதுப்பேட்டை லேன்ஸ், மவுண்டு ரோடு போஸ்டு |
| பெங்களூர்: | ... | கப்பன் ரோடு. |
| திருச்சிறாப்பள்ளி | ... | மதுரை ரோடு. |
| பெஜவாடா: | ... | பந்தர் ரோடு. |
| வேலூர்: | ... | 15, ஆபீஸர்ஸ் லேன்ஸ். |
| மைசூர்: | ... | காந்தி ஸ்கொயர். |



# உதிர்ந்த மலர்

செல்வம்

திண்ணையில் சாய்நாற்காலியும் தூங்கி விழும் குமாஸ்தாவுமாக இருந்தது, ஹரிஹரன் பி.எல். பாஸ் செய்த வேளாளுகூடம். இருந்தாலும், ஏதோ கடன் கிடன் வாங்காமல் கண்ணியமாகவே காலக்ஷேபம் நடந்து வந்தது. காரணம், மாயவரின் இனிய இருதயம் என்று கூற வேண்டும். அவன் குடும்பம், மனைவி, ஒரு பெண் குழந்தை இவர்களுடன் கூடிய ஒரு சிறிய குடும்பம் தான். பெண் மல்லிகாவிற்கு வயது ஒன்பது. பள்ளிக்கூடத்தில் ஐந்தாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். இதிலிருந்தே தெரியவில்லையா, மல்லிகா கெட்டிக்காரி என்று. அவர்கள் பள்ளிக்கூடத்தில் வருஷாந்திர விழா. அதற்குக் குழந்தைகள் எல்லோரும் சேர்ந்து ஒரு சிறிய நாடகம் நடத்தினார்கள். அன்றைய தினம் மல்லிகாவிற்கு வீட்டிற்கு வர நேரமாயிற்று. குழந்தையைத் தனியே அனுப்பக் கூடாதென்று உபாத்தியாயினி ருக்மணியும் குழந்தையுடன் துணையாக வந்தாள். மல்லிகா தன் அம்மாவிடம் உபாத்தியாயினி தன்னுடன் துணையாக வந்திருப்பதாகச் சொன்னாள். அம்மாவும் சந்தோஷத்துடன் வாசலுக்கு ஓடி வந்தாள். வந்தவள் அப்படியே திகைத்து நின்றுவிட்டாள். உபாத்தியாயினி வேறு யாருமில்லை; அவளுடன் சேர்ந்து படித்த ருக்மணியேதான். ஒரு சிறு காரணத்தினால் ருக்மணிக்கும் மல்லிகாவின் அம்மாவிற்கும் மனஸ்தாபம் உண்டாயிற்று. பரீக்ஷை சமயத்தில் மல்லிகாவின் அம்மாவுடைய புஸ்தகம் ஒன்று கெட்டுப் போய்விட்டது. அது ருக்மணியிடம் இருப்பதாகச் சந்தேகம் கொண்டு ஒருவருக்கொருவர் வார்த்தை வளர்ந்து, கடைசியில் சண்டையே உண்டாய் விட்டது. அதன் காரணமாக ஒருவருக்கொருவர் முகாலோபனம் செய்வதில்லை என்று பிரதிக்ஞை இட்டுப் பிரிந்தனர். இன்று மறுபடியும் சந்திக்கவே என்னமோபோல் இருந்தது இரண்டு பேருக்கும். இருந்தாலும் கொஞ்சம் வெட்கத்துடன், "ருக்மணியா?" என்றாள் மல்லிகாவின் தாயார் கோமதி.

ருக்மணியும் புன்சிரிப்புடன், "ருக்மணியேதான்!" என்றாள். அவ்வளவுதான், பழைய சண்டையை மறந்தார்கள். ஒருவருக்கொருவர் அளவளாவிப் பேச ஆரம்பித்து விட்டனர். ருக்மணியை அன்று தன்னுடைய வீட்டிலேயே தங்கும்படி வேண்டிக் கொண்டாள் கோமதி. அவள் கணவனும் ஏதோ கேஸ் விஷயமாக வெளியூர் போயிருந்ததால் ருக்மணியும் இரவு தங்குவதற்குத் தடையில்லாமல் சம்மதித்தாள். அன்று இரவு இரண்டு பேரும் தூக்கமில்லாமல் பழைய சம்பவங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். முடிவில், ருக்மணியை மல்லிகாவிற்கு 'டியூஷன்' வாத்தியாராக இருக்கும்படி கோமதி பிடிவாதமாகக் கேட்டுக் கொண்டாள். ருக்மணியும் மல்லிகாவின்மேல் உள்ள அன்பினால் சம்மதித்தாள். தினந்தோறும் மாலையில் மல்லிகாவிற்கு 'டியூஷன்' சொல்லிக் கொடுப்பதற்காக ருக்மணி வந்து கொண்டிருந்தாள். கேஸ் விஷயமாக வெளியூர் சென்றிருந்த கோமதியின் கணவன் திரும்பி வந்து விட்டான். கோமதி தன் கணவனிடம் தனது பால்ய சிநேகிதை ருக்மணி பள்ளிக்கூடத்தில் மல்லிகாவிற்கு உபாத்தியாயினியாய் இருப்பதாகவும், அவளையே மல்லிகாவிற்கு 'டியூஷன்' வாத்தியாராக இருக்கும்படி கேட்டுக் கொண்டதாகவும் சொன்னாள். ருக்மணி என்ற பெயரைக் கேட்டதும் ஹரிஹரனுக்கு என்னமோபோல் இருந்தது.

"என்ன, 'டியூஷன்' என்றவுடன், விளக்கெண்ணெய் சாப்பிட்டதுபோல முகத்தை வைத்துக் கொள்ளுகிறீர்களே? நாம்

ஒன்றும் அவளுக்குப் பணம் கொடுக்க வேண்டாம். அவள் நம்முடைய மல்லிகாவின்மேல் உள்ள அன்பினால் வருகிறாளே ஒழிய, பணம் ஒன்றும் வாங்கமாட்டாள். எனக்கும் அவளுக்கும் பள்ளிக்கூடத்தின் பரீக்ஷையின்பொழுது ஒரு புஸ்தகத்தின் காரணமாக சண்டை உண்டாயிற்று. அதன் காரணமாக ஒருவருக்கொருவர் முகாலோபனம் செய்வதில்லை என்று பிரதிக்ஞை செய்திருந்தோம். மல்லிகாவினால் எங்கள் பிரதிக்ஞை முறிந்தது!" என்று சந்தோஷம் தாங்காமல் சிரித்தாள். ஹரிஹரன் முகம் சந்தோஷப் படுவதற்குப் பதில் வாட்டமடைந்தே இருந்தது. ஆழ்ந்த சிந்தனையில் இருப்பவன்போல் அவன் நெற்றியில் இரண்டு மூன்று சுருக்கக் கோடுகளும் விழுந்தன.

"என்ன! கேஸ் விஷயம் ஜயம்தானே?" என்றாள் கோமதி.

"ஜயம் இல்லாவிடில் திரும்புவேனா?"

"என்னமோ ஆழ்ந்த யோசனை செய்பவர்போல் இருந்ததினால் கவலையுடன் கேட்டேன்."

"மஹாராணியின் கிருபை இருக்கும் வரையில் எனக்குக் கவலை என்ன?" என்று அவள் கன்னத்தில் தட்டினான் ஹரி.

கோமதியும் நாணத்துடன், "நல்ல விளையாட்டு!" என்று கூறிக்கொண்டே உள்ளே சென்றாள்.

ஒரு நாள் மாலை 'டியூஷன்' முடிந்ததும் ருக்மணி கோமதியிடம் வீட்டிற்குப் போவதற்காகச் சொல்லிக் கொள்ள வந்தாள். உள்ளே கூடத்தில ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக்கொண்டிருந்தாள் கோமதி. ருக்மணியைப் பார்த்ததும், "ருக்கு! வா, இப்படி உட்கார்! உன்னுடைய பாட்டைக் கேட்டு ரொம்ப நாள் ஆச்சு; இப்பொழுது ஒரு பாட்டுப் பாடேன்!" என்று கேட்டுக் கொண்டாள் கோமதி.

"என்ன பாடுகிறது? பாரதியார் பாட்டு ஏதாவது பாடட்டுமா? உனக்குப் பிடித்தமான 'கண்ணன் வரக் காணேன்' என்ற பாட்டைப் பாடுகிறேன்!" என்று பாட ஆரம்பித்தாள் ருக்கு.

"என்ன, பாட்டு அமர்க்களப்படுகிறதே!" என்று கேட்டுக் கொண்டே கூடத்திற்கு வந்தான் ஹரிஹரன். அவனை நிமிர்ந்து பார்த்தாள் ருக்கு. அதே சமயத்தில் ஹரிஹரனும் அவளைப் பார்த்தான். இருவர் கண்களும் சந்திக்கவும் இன்னதென்று சொல்ல முடியாத காந்த சக்தியால் தாக்குண்டவர்கள் போல் கல்லாய்ச் சமைந்தார்கள். ஹரிஹரன் "ருக்மணியா! நீயா?" என்றான்.

"உங்களுக்கு ருக்மணியை முன்னமேயே தெரியுமா?" என்றாள் கோமதி.

தலையை ஆட்டிக் கொண்டே உள்ளே சென்றான் ஹரிஹரன்.

ருக்மணியும் கோமதியிடம் விடை பெற்றுக்கொண்டு வீட்டிற்குச் சென்றாள்.

ஹரிஹரனுக்குப் பழைய ஞாபகங்களெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாய் வர ஆரம்பித்தன.

* * *

அப்பொழுது ஹரிஹரன் இண்டர் முதல் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான். திடீரென்று ஒரு நாள் அவன் அப்பாவிடமிருந்து அவனுக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் அவர், "இனிமேல் என்னால் அதிகமாகப் பணம் அனுப்ப முடியாது. சிக்கனமாகச் செலவு செய்யவும். என் நண்பரான எஞ்ஜினீயர் ராமச்சந்திர அய்யர் தம் பெண்ணுக்கு உன்னை 'டியூஷன்' சொல்லித் தரும்படிச் சொல்லுமாறு எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். நல்ல 'டியூஷன்' உபாத்தியாயர் கிடைக்கவில்லையாம். பெரிய இடம், ஜாக்கிரதையாய்ப் பழகு!" என்று எழுதியிருந்தார். இந்தக் கடிதத்தின் பயனாகத்தான் ஹரிஹரன் ருக்மணியை முதன் முதலாகச் சந்தித்தான். 'டியூஷன்' வாத்தியார் என்ற ஹோதாவில் அவன் அடிக்கடி அவர்கள் வீட்டிற்குப் போய் வந்து கொண்டிருந்தான். ருக்மணியும் அவனிடம் மரியாதையாகத்தான் நடந்து வந்தாள். ஹரிஹரனும் வரம்பு மீறாமல்தான் நடந்து வந்தான். அவர்களிடம் உள்ள நம்பிக்கையால் ஒருவரும் 'டியூஷன்' அறையின் பக்கம் வருவதில்லை. அந்த வருடம் பரீக்ஷையில் ருக்மணிதான் முதல் வகுப்பில் தேறினாள். "அடுத்த வருடம் ருக்குவைக் காலேஜில் சேர்க்க வேண்டும்; ஆகையால் லீவிலும் அவளுக்கு 'டியூஷன்' வேண்டும்" என்று நினைத்த எஞ்ஜினீயர் ராமச்சந்திர அய்யர், ஹரிஹரனை லீவிற்கு இங்கேயே தங்கும்படி அவன் அப்பாவுக்குக் கடிதம் எழுதிக் கேட்டுக் கொண்டார். இது ஹரிஹரனுக்குச் சம்மதமில்லை. இருந்தாலும், அப்பாவின் உத்தரவுக்காகவும்,

இண்டர் இரண்டாவது வருடப் பாடம் நிறையப் படிப்பதற்கு இருந்தாலும், அங்கேயே தங்குவதற்குச் சம்மதித்தான். ஹாஸ்டல் மூடி விட்டதால் ருக்மணியின் வீட்டிலேயே ஒரு அறையை ஹரிஹரனுக்கு ஒழித்துக் கொடுத்தார்கள்.

இளவேனிற் காலம் போய் வசந்த காலம் வந்தது. மல்லிகைச் செடிகளெல்லாம் கொல்லென்று சிரித்தன. எங்கும் வசந்த காலத்தின் கோலாகலமாகவே இருந்தது. ஒரு நாள் மாலை தோட்டத்தில் உட்கார்ந்து கொண்டு ஹரிஹரன் படித்துக் கொண்டிருந்தான். மல்லிகை மலர்களின் மணம் காற்றில் மிதந்து வந்து அவனுக்கு உற்சாகத்தை ஊட்டியது. சாதாரணமாகவே ஹரிக்குப் புஷ்பம் என்றால் பைத்தியம். அதிலும் மல்லிகை மலர் என்றால் கேட்க வேண்டுமா! ஒரு செடியிலிருந்து ஒரு கொத்துப் புஷ்பத்தைக் கிளையோடு ஒடித்துக் கையில் வைத்துக் கொண்டான். "பூ வேண்டுமென்றால் செடியையா ஒடிப்பார்கள்?" என்று ஒரு குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தான் ஹரி. ருக்மணி கைநிறையப் புஷ்பத்துடன் வந்து கொண்டிருந்தாள்.

"மன்னிக்கவும்; புஷ்பத்தின்மேல் உள்ள ஆசையால் பறித்து விட்டேன்!"

"கரும்பு ருசி என்றால் வேரோடு பறிப்பார்களா?"

"ஏது, வர்ணனையில் கைதேர்ந்தவளாய் விட்டாயே?"

"தடதம் பாடம் கேட்டால் இதுகூடத் தெரியாமலா இருக்கவேண்டும்?"

"சரி; நளன் அன்னத்திடம் தமயந்திக்கு என்ன சேதி சொல்லி அனுப்பினான்?"

"இந்த வேளைகளில்கூடப் பாடம்தானா? எப்பொழுது பார்த்தாலும் என்னைப் பாடம் கேட்டால் எனக்குப் பைத்தியமே பிடித்து விடும்!"

"ஆம்" என்றான் ஹரி, சிரத்தையாய்ப் படிப்பவன்போல் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்துக் கொண்டே. "நான் பார்க்கலாமா?" என்று கூறிக்கொண்டே வெடுக்கென்று அவன் கையிலிருந்த புஸ்தகத்தைப் பிடுங்கினாள் ருக்கு.

திடீரென்று மின்சாரத் தாக்குதல்போல் இருந்தது ஹரிக்கு. ருக்குவின் கை அவன் மேல் பட்டதும், மாலை வேளையும் மல்லிகை மணமும் சேர்ந்து அவர்களைக் காதல் உலகத்தில் கொண்டு போய்த் தள்ளியது.

"என்ன, காதல் கதையா?" என்றாள் ருக்கு.

"ஆமாம்!" என்றான் ஹரி.

"உமக்குக் காதல் கதை படிப்பதென்றால் ரொம்ப ஆசைபோல் இருக்கிறதே?"

"உனக்கு மாத்திரம் காதல் கதை என்றால் பிடிக்காதோ?"

"பிடிக்காமல் என்ன? இந்தப் புத்தகத்தில் லீலாவும், சேகரும் காதல் கொண்டு கடைசியில், அவர்கள் காதல் சேகரின் தந்தையால் முறிவுபட்டதுபோல் இருந்தால் எனக்குப் பிடிக்காது!"

"சேகரின் தந்தையைப்போல் எனக்கும் ஒரு முட்டாள் தந்தை இருந்தால் அதற்காகக் காதலைத் திரஸ்கரிக்க மாட்டேன்!"

"சரி, உங்களால் காதலிக்கப்படும் பெண் மிகவும் அதிர்ஷ்டசாலிதான்! யாருக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ அந்த பாக்கியம்!"

"ருக்கு! நீதான் அந்தப் பாக்கியசாலி!" என்று அவள் இரண்டு கைகளையும் பிடித்தான் ஹரி.

"உஸ்! விட்டுவிடுங்கள். யாராவது வந்துவிடப் போகிறார்கள்!" என்றாள் ருக்கு.

அவர்கள் காதல் விதை ஊன்றிய முதல் நாள் அதுதான். அது முளைத்து இலை விட்டுச் செடியாகி அரும்புவிட ஆரம்பித்து விட்டது. மலரும் தருணம்; ஹரிஹரன் தகப்பனாரிடமிருந்து ஒரு உத்தரவு வந்தது.

"ஊருக்கு உடனே புறப்படவும். உனக்குக் கல்யாணம் நிச்சயம் செய்து முகூர்த்தம் வைத்தாகி விட்டது. பெண்ணின் பெயர் கோமதி. உன்னுடைய மேல் படிப்பை உனக்கு மாமனாராக வருகிறவர் ஏற்றுக்கொண்டிருக்கிறார். இந்த மாதிரி சம்பந்தம் கிடைக்காது. நீ உடனே புறப்படவும்."

கடிதத்தைக் கொண்டுபோய் ருக்குவிடம் காண்பித்தான் ஹரிஹரன்.

"ரொம்ப சந்தோஷம். பிதிர்வாக்கிய பரிபாலனம் செய்யுங்கள். சேகரின் தந்தை போல் உமக்கும் தந்தை கிடைத்திருக்கிறார். அந்த லீலாவின் துரதிர்ஷ்டம் போன்றது இந்த ருக்மணியின் துரதிர்ஷ்டம். உம்முடைய இன்ப வாழ்வில் இந்த ருக்குவை மறந்துவிடுங்கள். அதுவே நான் என்

னுடைய காதலின் அடையாளமாகத் தங்களைக் கேட்பது !" என்றாள் ருக்கு.

"ருக்கு ! இதுதான் எனக்கு நீ கூறும் ஆறுதல் மொழியோ ?" என்றான் ஹரி.

"உமக்கு ஆறுதல் மொழி கூற வேறு ஒருத்தி காத்திருக்கும்போது, நான் என்னத்தைக் கூறுவது ?" என்றாள் ருக்கு.

அவள் கண்களிலிருந்து மளமள வென்று கண்ணீர் உதிர்ந்தது.

தன் கைக்குட்டையால் அவள் கண்ணீரைத் துடைக்க ஆரம்பித்தான் ஹரி. வெடுக் கென்று அவன் கையை உதறித் தள்ளிவிட்டு உள்ளே சென்றாள் ருக்கு. அதன் பிறகு ஹரி அவளைச் சந்திக்கவே முடியவில்லை. ருக்கு தன் அப்பாவிடம் சொல்லி டியூஷனை நிறுத்திவிட்டாள். ஹரி அவளைச் சந்திக்கச் செய்த முயற்சியெல்லாம் வீணாயின.

*   *   *

இவையெல்லாம் நடந்து எத்தனையோ நாட்களுக்குப் பிறகு, திடீரென்று ருக்மணியைச் சந்திக்கவே ஹரிஹரனுக்குத் தலை சுழன்றது. எப்படியாவது ருக்குவிடம் தன்னை மன்னித்து விடும்படி கேட்க வேண்டுமென்று துடியாய்த் துடித்தான். ருக்மணியை அவள் வீட்டில் சந்திப்ப தென்று தீர்மானித்தான். ருக்குவின் வீட்டிற்குள் நுழைவதற்கு ஹரிஹர னுடைய கால்கள் மறுத்தன ; சிறைச் சாலைக்குச் செல்லும் கைதியைப்போல் தயங்கித் தயங்கி நின்று நின்று சென்றான். உள்ளே கலகலவென்று பெண்கள் பேசும் சத்தம் கேட்டது. மெதுவாக எட்டிப் பார்த்தான்.

அவன் தன்னுடைய அந்தரங்கமெல்லாம் யாருக்குத் தெரிய வேண்டாமென்று பயந் தானோ, அவளே அங்கு பிரசன்னமாயிருந் தாள் ! அவள்தான் கோமதி. திருடனுக்குத் தேள் கொட்டியதுபோல் இருந்தது ஹரிக்கு. எது வந்தாலும் வரட்டும், முன் வைத்த காலைப் பின் வாங்குவதில்லை என்ற தைரியத்துடன் உள்ளே சென்றான் ஹரி.

"அப்பா ! டீச்சர் அம்மா வருக்குப் போகப் போகிறார்களாம் !" என்றாள் தன் தாயுடன் இருந்த மல்லிகா.

"எந்த வருக்கு ?" என்றான் ஹரிஹரன்.

"அதுவும் தங்களுக்குத் தெரிந்துதான் ஆகவேண்டுமோ ?" என்றாள் ருக்மணி சிரித்துக் கொண்டே. கோமதியின் எதிரில் ருக்மணி தன்னிடம் பேசியது ஹரிஹர னுக்கு அச்சமா இருந்தது. இருந்தாலும் தைரியமாக, "எந்த வூர் என்று தெரியக் கூடாதோ ?" என்றான்.

"தெரிந்தால் அங்கும் என்னைத் தேடிக் கொண்டு வருவதற்காகவா ?" என்றாள் ருக்மணி.

"அவளுக்கு எதிரில் என்னை எதற்காக இப்படிச் சாட்டையால் அடிப்பதுபோல் அடித்துப் பேசுகிறாய் ?" என்றான் ஹரி.

"உங்கள் இருவரின் நன்மைக்காகத்தான்! கோமதிக்குத் துரோகம் செய்ய என்னால் முடியாது. கோமதியை நீங்கள் மணம் செய்து கொள்வதற்கு முன்பே, நான் என்னை மறந்து விடும்படி தங்களைக் கேட்டுக் கொள்ள வில்லையா ?" என்று கேட்டாள் ருக்கு.

"மறக்க முடியாததினால்தான் உன் னிடம் மன்னிப்புக் கேட்க வந்தேன் !"

"எதற்காக என்னிடம் மன்னிப்பு ? நம்முடைய விஷயங்களையெல்லாம் கோமதி யிடம் நான் சொல்லிவிட்டேன். வேண்டு மானால், கோமதியிடம் மன்னிப்பைக் கோருங்கள். அவளுக்குத் துரோகம் செய் யாமல் இருந்தால் அதுவே என் மனச் சாந்தியின் அடையாளம் !" என்றாள் ருக்கு.

அதற்குமேல் ஹரிஹரனால் அங்கு இருக்க முடியவில்லை. வெளியே வந்து விட்டான். உள்ளே கலகல வென்று கை கொட்டிச் சிரிக்கும் சத்தம் கேட்டது. அப்பொழுது "பெண்மையே வெற்றி பெற்றது !" என்று யாரோ சொல்லுவதுபோல் தோன்றியது ஹரிஹரனுக்கு. கால் சென்ற வழியே சென்றான். ஆனாலும் மனப்புயல் அடங்கவே இல்லை. கடிவாள மில்லாத குதிரையைப் போல் அவன் மனம் ஓடிக்கொண்டிருந்தது.



"ஏழைக்கும், பணக்காரனுக்கும் உள்ள வித்தியாசம் என்ன ?"

"ஏழை அடுத்த வேளைச் சாப்பாட் டைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண் டிருப்பான். பணக்காரன் முந்தைய வேளைச் சாப்பாட்டைப் பற்றிக் கவலைப் பட்டுக் கொண்டிருப்பான்."

# வான சஞ்சாரம்

இசைத்தேன்

சங்கீதக் கலையை ஆத்மார்த்தமாகப் பயிற்சி செய்து, தொழில் விந்யாஸத்துக்கு எவ்விதத்திலும் குறைவில்லாத தேர்ச்சி பெற்ற அபேக்ஷகர்களில் ஸ்ரீமதி ருக்மணி ராஜகோபாலன் முக்கிய ஸ்தானத்துக்குரியவர் என்பது அவர் சென்னை நிலையத்தில் 23ம் பாடியதிலிருந்து ரஸிகர்களுக்குத் தெரிந்திருக்கும். குடும்பத்தின் மதிப்புக்கேற்ப அவரது கலை மதிப்பும் உயர்ந்தது. சிறந்த ஞானபாவத்துடன், சுருதி சுத்தம், சஞ்சாரம், சங்கதி இவைகளின் தெளிவு, அழுத்தம், தைரியம் கொண்ட கற்பனை, பாடுவதையெல்லாம் அழகுபடுத்தும் பல அம்சங்களின் பொருத்தம் யாவும் சேர்ந்து விளங்கின. மத்யமாவதி, சிந்துபைரவி ராக ஆலாபனைகளிலும் இறுதியில் கேட்ட ராகமாலிகையிலும் ராகஸ்வரூபங்கள் நன்கு ஸ்புரித்தன. சங்கதிகளுக்குப் பின் கொடுத்த கார்வை பழகிய மதுரம். ஹரிகாம்போதி உருப்படியில் நிரவல் ஜோராயிருந்தது. ஆனால் புரோகிராமில் முன் தடவை கண்ட கச்சிதம் இத்தடவை காணப்படவில்லை. முதல் பாகத்தில மத்யமாவதி உருப்படியை முடிப்பதற்குமுன் 'தியாகராஜ விஜய' என்று பாடிக் கொண்டிருக்கும் போதே அன்னௌன்ஸர் சர்ச்சில் மந்திரி சபை ராஜிநாமாச் செய்த செய்தியைச் சொல்ல ஆரம்பித்தது அன்றைய விசேஷம்.

26ம் சென்னை நிலையத்திலிருந்து மற்றுமொரு சங்கீத விருந்து அளிக்கப்பட்டது. பாடியவர் ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள். சங்கீதத்தைத் தொழிலாகக் கொண்ட ஸ்திரீகளில் உயர்ந்த ஸ்தானம் பெற்றவர். குரல் நயமும் பாடுவதிலெல்லாம் கச்சிதமும், தெளிவும் கொண்டு கேட்கக் கேட்கச் சலியாத சங்கீதம். ஜயந்தஸ்ரீ, கீரவாணி, சாவேரி ராகங்களும் அவைகளின் கிருதிகளும் அழகு வடிவங்களாயிருந்தன. பல்லவி ராகமாய் எடுத்த தோடி வெகு சிறப்பாயிருந்தது. 'தென்பழனி வடிவேலவனே' என்ற பல்லவியைத் தாளக் கச்சிதத்துடனும் லயவிந்யாசத்துடனும் கையாண்ட திறமை அரிது.

சங்கீத உலகில் ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் முதன்மை ஸ்தானத்துக்கு வந்து எத்தனையோ காலமாகி விட்ட போதிலும், ரேடியோ நிலையத்தார் அவரை இதுவரை காலமும் முதல் வரிசையில் சேர்க்காமலிருந்தார்கள். அந்தத் தவறை இப்போது நிவர்த்தி செய்து விட்டது குறித்து மகிழ்வடைகிறேன். இனி அடிக்கடி ஸ்ரீமதி பட்டம்மாளின் பாட்டை வானொலி மூலம் கேட்கக் கூடுமென்று எதிர்பார்க்கிறேன்.

திருச்சியில் 28ம் கேட்ட கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையின் வயலின் வாத்யம் வழக்கம்போல் அபாரமாயிருந்ததென்று சொல்லத் தேவையில்லை. கல்யாணி இழைந்து வந்தது. ஸ்ரீரஞ்சனி, பேகடா, மத்யமாவதி ராகங்களும் ஜோராயிருந்தன.

• • •

21ம் நிகழ்ச்சிகளில் திருச்சியில் கேட்ட வி. மைதிலியின் வீணையும், எம். எஸ். மோஹனாம்பாளின் பாட்டும் சென்னையில் எஸ். நரஸிம்முலுவின் கானமும் குறிப்பிடத்தக்கவை. முதலாமவரின் வாத்யத்தில் ஷண்முகப் பிரியா அழுத்தமும் நிதானமும் கொண்டு நேர்த்தியாயிருந்தது. மோஹனாம்பாள் இனிய குரலில் வழங்கிய ராகங்களில் விஜயநாகரியும் காம்போதியும் சிறந்து விளங்கின.

25ம் சென்னையில் கேட்ட டி. வி. வெங்கட கிருஷ்ணனின் கச்சேரியும் கவனிக்கத் தக்கதாயிருந்தது. முதல் பாகத்தில் உசேனி, கமாஸ், இரண்டாம் பாகத்தில் மாயாமாளவகௌளை, முகாரி ராகங்கள் ஞானபாவம் கொண்டதாயிருந்தன. உருப்படிகளில் பாடிய ஸ்வரம் விறுவிறுப்பாயிருந்தது.

26ம் காலை சென்னை நிலையத்திலிருந்து வி. ஜே. வர்மாவின் வேணுகானம் ஜில்லென்று முதலாவதாகக் காதில் விழுந்தது. நாட்டை, மணிரங்கு, காபி ராகங்கள் நல்ல ரகமாயிருந்தன. அன்று திருச்சியில் கேட்ட எஸ். பாலஸரஸ்வதியின் வயலின் வாத்தியமும் ரஸிக்கத் தக்கது.

27ம் காலையிலும் பிற்பகலிலும் சென்னையில் பாடிய டி. கே. ஆராவமுதன், நயமான குரலில் பிலஹரி, ஹம்ஸாநந்தி ராகங்களைத் திறம்பட வழங்கினார்.

ஸ்ரீ பத்தமடை சுந்தரமய்யரின் பாட்டு ஞானபாவச் சிறப்புக் கொண்டது. கட்டை சாரீரத்தில் அவர் செய்திருக்கும் சாதகம் அரிது. கமக இழைப்புகள் நிறைந்திருந்தது. பூர்வி கல்யாணியின் விரிவான ஆலாபனையும் அதில் அவர் செய்த வேலைப்பாடுகளும் கேட்போரைப் பிரமிக்கச் செய்தன. 'ஜங்காரச்ருதி' கிருதியில் நிரவல் ஸ்வரங்களை வாரிக் கொட்டினார். பைரவி ராகம் கற்பனைப் பொலிவுடன் உருக்கமாயிருந்தது.

28ம் சென்னை நிலையத்திலிருந்து கேட்ட கம்பப்பட்டி அக்காஜிராவ் வீணையும் ஆர். நீலகண்ட அய்யரின் பாட்டும் கவனத்தைக் கவர்ந்தன. முன்னவரின் மீட்டு வெகு மிருதுவாய்ப் பாட்டுடன் சேர்ந்திருந்தது. நீலகண்டய்யரின் அடாணாவும் ஸிம்மேந்திர மத்யமமும் சிறப்பாயிருந்தன.

29ம் கச்சேரிகளில் சென்னையில் பாடிய கொத்தமங்கலம் ஸ்ரீனிவாஸய்யரது முதன்மையாயிருந்தது. கனிப்பான குரல், பிருகா நிறைந்த சங்கீதம். எல்லாவற்றையும் அனுபவித்துப் பாடினார். சாரமதி, பைரவி ராகங்கள் சிறப்பாயிருந்தன. ரஞ்சனி உருக்கமாயிலும் பேஷாயிருந்தது. பைரவி உருப்படியில் நிரவல் ஸ்வரம் வெகு ஜோர்.

# பேட்டி கண்டேன்!

— நாடோடி —

[இந்திய அரசியல் நிலைமையைத் தெளிவு படுத்துவதற்காக ஒரு நாள் என்னை நானே பேட்டி கண்டேன். என்னை நான் கேட்ட கேள்விகளும், அதற்கு நான் அளித்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

**கேள்வி :**—இந்திய அரசியல் நிலைமையைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

**பதில் :**—என் அபிப்பிராயமா? இந்திய அரசியல் நிலைமையில் இப்பொழுது பெருத்த நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது.

**கேள்வி :**—நெருக்கடி என்றால்?

**பதில் :**—மூன்றாவது வகுப்பு ரயில் வண்டியில் ஏறப்போகும் பிரயாணி, வண்டியிலும் ஏற முடியாமல், கீழேயும் இறங்க முடியாமல் கதவுக்கருகிலேயே நின்றுகொண்டு தவிக்கிறானே, அதற்குத்தான் 'நெருக்கடி' என்று பெயர்!

**கேள்வி :**— இந்த நெருக்கடி எப்பொழுது ஏற்பட்டது?

**பதில் :**—ஐரோப்பாவில் யுத்தம் ஆரம்பித்ததும் ஏற்பட்டது.

**கேள்வி :**—அப்படியானால் இப்பொழுது ஐரோப்பிய யுத்தம் தீர்ந்துவிட்டதே, நெருக்கடியும் தீரவேண்டும் அல்லவா?

**பதில் :**—ஆம், தீரத்தான் வேண்டும். ஆனால்.........




நெருக்கடி !

**கேள்வி :**—ஆனால்?

**பதில் :**—ஆனால் நெருக்கடி இன்னும் தீரவில்லை.

**கேள்வி :**—நெருக்கடி ஏன் தீரவில்லை?

**பதில் :**—ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஒத்துப் போகவில்லை.

**கேள்வி :**—ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஏன் ஒத்துப் போகவில்லை?

**பதில் :**—ஜனாப் ஜின்னா முட்டுக்கட்டை போட்டதனால்.

**கேள்வி :**—ஜனாப் ஜின்னா ஏன் முட்டுக்கட்டை போட்டார்?

**பதில் :**—நாம் எல்லோரும் ஒத்துப் போகாததால்.

**கேள்வி :**—அப்பொழுது நெருக்கடி தீர நாம் என்ன பண்ண வேண்டும்?

**பதில் :**—நாம் எல்லோரும் ஒன்றுபட வேண்டும்.

**கேள்வி :**—ஒன்றுபட்டு......?

**பதில் :**—நம் பலத்தைத் திரட்ட வேண்டும்.

**கேள்வி :**—நம் பலத்தைத் திரட்டி...?

**பதில் :**—கிளர்ச்சி செய்ய வேண்டும்.

**கேள்வி :**— என்னவென்று கிளர்ச்சி செய்ய வேண்டும்?

**பதில் :**—தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று கிளர்ச்சி செய்ய வேண்டும்.

**கேள்வி :**—உடனே என்ன நடக்கும்?

**பதில் :**—தலைவர்கள் விடுதலை பெறுவார்கள். சிறைச்சாலைகளிலிருந்து வெளியே வருவார்கள்.

**கேள்வி :**—வெளியே வந்து என்ன செய்வார்கள்?

**பதில் :**— நேரே ஆஸ்பத்திரிக்குப் போவார்கள்!

**கேள்வி :**—எதற்காக?

**பதில் :**—தங்கள் உடலைக் குணப்படுத்திக் கொள்வதற்காக.

**கேள்வி :**—உடலைக் குணப்படுத்திக் கொண்டு?

**பதில் :**—நாடு முழுவதும் போய்ப் பிரசாரம் செய்வார்கள்.

**கேள்வி :**—என்ன வென்று பிரசாரம் செய்வார்கள் ?

**பதில் :**—நாம் எல்லாரும் ஒன்றுபட வேண்டுமென்று பிரசாரம் செய்வார்கள்.

**கேள்வி :**—நாம் எல்லாரும் ஒன்று பட்டு......?

**பதில் :**—நம் பலத்தைத் திரட்டிக் கொள்ள வேண்டும்.

**கேள்வி :**—பலத்தைத் திரட்டிக் கொண்டு ?

**பதில் :**— சுதந்திரக் கோரிக்கையை வலியுறுத்த வேண்டும்.

**கேள்வி :**—வலியுறுத்தினால் ?

**பதில் :**—தலைவர்கள் சிறையில் அடைக்கப் படுவார்கள்.

**கேள்வி :**—தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டதும் நாம் என்ன பண்ண வேண்டும் ?

**பதில் :**— அவர்கள் விடுதலைக்காகக் கிளர்ச்சி செய்ய வேண்டும்.

**கேள்வி :**— அதற்கு நாம் என்ன பண்ண வேண்டும் ?

**பதில் :**—நாம் எல்லாரும் ஒன்றுபட வேண்டும்.

**கேள்வி :**—என்ன ஐயா, எதற்கெடுத்தாலும் ஒன்றுபட வேண்டும் என்கிறீர் ? எதற்காக ஒன்றுபட வேண்டும் ?

**பதில் :**— ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே !

**கேள்வி :**— நம்முள் ஒற்றுமை நீங்கில்......?

**பதில் :**—அனைவர்க்கும் தாழ்வே !

[இந்தச் சமயத்தில் என்னைப் பேட்டி காண வேறொரு நிருபர் வந்துவிட்ட படியால் நான் அங்கிருந்து நகர வேண்டியதாயிற்று.]

[மேற்கண்ட விதமாக என்னை காணே பேட்டி கண்டதிலிருந்து வெளியாகும் நீதி என்ன வென்றால், தலைவர் ராஜாஜியின் யோசனையை ஒப்புக் கொள்ளாவிடில் நாட்டில் மேலே சொன்ன ஹாஸ்ய நாடகம்தான் மீண்டும் மீண்டும் நடந்து கொண்டிருக்கும்.]

---



## மேற்கு இந்தியாவில் —
## தேநீர் அருந்தும் நேரம்

கடற்கரை யோரமாயுள்ள செழிப்பான விளை நிலங்களடங்கிய குஜராத்திற்கும் பெரும்பாலும் கல்மயமாய் இருக்கும் தக்காண பீட பூமியிலுள்ள மஹாராஷ்டிரத்திற்கும் எவ்வளவு வித்தியாசம்! சொந்த நிலங்களில் பாடு படுவதிலோ, கூலிக்கு உழைப்பதிலோ, அல்லது பட்டணங்களில் வேலை செய்வதிலோ இந்நாட்டு மனிதர்கள் தேர்ந்தவர்கள்; உழைப்பாளிகள்.

குஜராத்திகளுக்கும், மஹாராஷ்டிரர்களுக்கும் உள்ள அநேகம் பழக்க வழக்கங்களில் வித்தியாசமே கிடையாது. காலையில் குளித்த உடன் ஒரு கோப்பை சூடான தேநீர் அருந்துவது இவர்கள் இருவருக்கும் உள்ள ஒரு பொது வழக்கம். ஓர் கூஜாப் பாத்திரத்தில் தேயிலைக் கஷாயத்தைப் போட்டு அவ்வவர்கள் ருசிக்குத் தகுந்தபடி பாலையும் சீனியையும் தனித் தனியே கோப்பையில் கலந்து கொள்வார்கள். அநேகமாய் மத்தியானங்களிலேயே, அன்றைய முதல் உணவு உண்ணப்படும் கிராமங்களில் உள்ளவர்கள் காலைத் தேநீர்ப் பானத்தோடு கொஞ்சம் பழங்களும் உண்ணுவது வழக்கம்.

மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேலும் கீழும் உள்ள இந்தப் பிரதேசங்களில் இந்தியாவின் மற்றப் பிரதேசங்களைப் போலவே புத்தம் புதிய ப்ரூக் பாண்ட் தேயிலை அதிகமாக விரும்பப் படுகிறது.

# ப்ரூக் பாண்ட்

"இரு இலையும் ஒரு மொட்டும்"



**Make your SMILE enviable**

பற்கள் ஆடுகின்றனவா ?

ஆனால் அவைகளுக்கு

# தைமோஸின்

சிகிச்சை அளியுங்கள்.

ப்ரோச் பல் வைத்தியர் Dr. C. M. தேசாய், L. D. S. அவர்களின் மருந்து முறைப்படி தயாரித்தது. டூத் பிரஷ் அல்லது விரலினால் சில துளிகள் உபயோகித்தால் போதும். மாயமாக பற்களின் காவியை அகற்றி சொத்தை விழுவதைத் தடுத்து, பற்களை ஆரோக்யமாயும் வெண்மையாயும் செய்து, பயோரியா, ஈறு சம்பந்தமான வியாதிகள், வாய் வேக்காடு மற்றும், தொண்டை உபாதைகள் இவற்றைத் தடுக்கும்.

2 அவுன்ஸ் புட்டி விலை ரூ. 2/8

தபால் பாக்கிங் சார்ஜ் தனி.

டெண்டல் இன்ஸ்டிடியூட்

ஸேவா ஆஸ்ரமம், ப்ரோச்

பிரபல மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

ஏஜண்டுகள் :

T. M. தாகூர்

அண்டு கம்பெனி

1-10 ஸ்டிரங்கர்ஸ் ரோடு,

ஜி. டி. மதராஸ்.



**THYMOCIN**

*OBTAINABLE EVERYWHERE*




பலஹீன மடைந்து குன்றிப் போயிருக்கும் மனிதனையும் ஸ்திரீயையும் பலப்படுத்துகிறது.

இந்த இயற்கை டானிக் ஆகாரம் புஷ்டியளிக்கும் தாது உப்புக்களை தினசரி பங்கீடு செய்து உங்கள் தேகத்திற்குப் புனர் போஷாக்கு அளிக்கிறது.

விக்கல்ப்பின் இவ் வருநியான ஆகாரத் தாதுவின் சேர்க்கை மிகவும் உன்னதமானது. உதாரணமாக, ஒரே தினம் "விக்கல்ப்" உட்கொண்டால்: ஏழு முட்டைகளிலுள்ள அளவு கால்ஷியத்தையும், 23 பவுண்டு ஆரஞ்சிலுள்ள அளவு இரும்புத் தாதுவையும், 4 பவுண்டு வெண்ணெயிலுள்ள அளவு பாஸ்பரத்தையும் — அளிக்கிறது. நிற்க, விக்கல்ப்பின் — மிகவும் அத்தியாவசியமான போஷாக்கை அளிக்கக்கூடிய, தவிர்க்க முடியாத பன்னிரண்டு வகைப்பட்ட தாது உப்புக்களும், அயோடின் ஆகாரமும் அடங்கியுள்ளன.

இத்தகைய அரிய தாதுக்களும் வைடமின்களும் உங்கள் சரீரத்தில் சம்பந்தப்பட்ட உடனேயே தேகம் கிரமமாக புனர் போஷாக்களிக்கப் படுகிறது. நீங்கள் வளர ஆரம்பிக்கிறீர்கள். நரம்புத் தளர்ச்சி நீங்குகிறது. களைப்பு நீங்கி விருவிருப்பும், பலஹீனம் நீங்கி திடமாகவும் மாறுகிறது. மறுபடி சுக சௌக்யத்திற்கும், புஷ்டிக்கும் ஓர் உயர் வழி கண்டு பிடித்து விட்டீர்கள்.

**VIKELP** MINERAL TABLETS

விக்கல்ப் தாது பில்லைகள்

Ad. No. 5436

# மிதமிஞ்சி போஷிப்பது கெடுதலை விளைவிக்கும்



இது மிகவும் மெல்லிய தன்மை வாய்ந்த, அங்க அமைப்புள்ள குழந்தைகள் விஷயத்தில் மிகவும் பொருந்தமாகும்.

அளவுக்கு மீறி உணவு அளிப்பதாலும், வேளை தப்பிய வேளையில் உணவு கொடுப்பதாலும் ஈரலுக்கு அதிக வேலை உண்டாகி சொற்ப காலத்தில் ஈரல் பெருக்கம் ஏற்பட காரணம் ஆகிறது. இந் நிலைமையை அறியாமல் நீடிக்க விட்டாலும், சரியான சிகிச்சைசெய்யாவிட்டாலும் அது அபாயகரமான நிலைமைக்குக் கொண்டுவிடும்.

## ஆரம்ப அறிகுறிகளை கவனிக்கவும்



அடிக்கடி, ஜுரம் ஏற்படுதல், மலசிக்கல், அதிக மலப்போக்கு, வாந்தி, பசியின்மை, வயிறு பொருமல், பொதுவாக சோர்ந்திருத்தல், அடிக்கடி சிறுநீர் சிறுத்தல்.

## அபாயத்தை ஆரம்பத்திலேயே அகற்றுங்கள்

வியாதி குறிகள் கண்ட உடனே ஜம்மியின் லிவர் க்யூர் கொடுங்கள். அப்படிச் செய்வது உங்கள் கவலையை நீக்கி பணச்செலவைக் குறைத்து, வியாதியை முற்ற விடாமல் செய்து பின்விட்டு ஏற்படக்கூடிய அபாயத்தை தவிர்க்கும்.

ஜம்மியின்

**லிவர்க்யூர்**

உபயோகியுங்கள்

குழந்தையின், ஈரல் குலைக்கட்டிக்கு ஜம்மியின் லிவர் க்யூர் உபயோகியுங்கள். எல்லா விடங்களிலும் விற்கப்படுகின்றன

ஜம்மி வெங்கிட்டரமணய்யா & சன்ஸ்

மைலாபூர் — மதராஸ்.

கிளைகள்:— பம்பாய், கல்கத்தா, டில்லி, திருச்சிராப்பள்ளி, பெங்களூர், கும்பகோணம்.

J. 88 TM

# நீங்கள் உபயோகித்துப் பார்த்திருக்கிறீர்களா?



உங்களது ஆடைகளை வெளுக்க எங்கள் பார் சோப்பை உபயோகித்துப்பாருங்கள். நிச்சயமாக திருப்தி யடைவீர்கள். ஏனெனில் அது ஓர் உயர்ந்த ரக சோப்பு.

## டெக்ஸ

## பார் சோப்



டெக்ஸ
கெமிகல் இண்டஸ்ட்ரீஸ்
லிமிடெட்.

கன்னிக்கோட்டை

Regd No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madra

கொண்டவர்களில் தளபதி சசாங்கனும் ஒருவன்.

"புத்தம் கச்சாமி!" என்று நாகநந்தியும் கடுகடுத்த குரலில் கூறினார்.

"ஆ! நாகநந்தி பிக்ஷுவே! திடீரென்று இங்கே எப்படி முளைத்தீர்கள்? நாகம் இத்தனை நாளும் எந்த வளையில் ஒளிந்து கொண்டிருந்தது? இப்போது ஏன் வெளியில் தலையை நீட்டுகிறது?" என்று தளபதி சசாங்கன் கேட்டான்.

கேட்டவர்கள் நடுங்கும்படியான நாகப் பாம்பின் சீறல் சத்தம் அப்போது எங்கிருந்தோ கேட்டது.

அதே சமயத்தில் "பாம்பு! பாம்பு!" என்று ஒரு கூக்குரல். அதைக்கேட்ட அங்கே கூடியிருந்த வீரர்கள் சிதறி ஓடினார்கள்.

நாகப் பாம்பு ஒன்று சரசரவென்ற சப்தத்துடன் தளபதி சசாங்கன் ஏறியிருந்த குதிரையின் கால்மீதேறி ஊர்ந்து அப்பாலிருந்த புதருக்குள் விரைந்து சென்று மறைந்தது.

"தளபதி! ஜாக்கிரதை! நாகப் பாம்பு சாதாரணமாய்க் கடிக்காது; ஆனால் கடித்துவிட்டால் அதன் விஷம் ரொம்பப் பொல்லாதது!" என்றார் பிக்ஷு.

சசாங்கன் பல்லைக் கடித்துக் கொண்டு "பிக்ஷு!...... இந்த அருமையான விஷயத்தைச் சொன்னதற்காக மிகவும் வந்தனம். எனக்கு அலுவல் ரொம்ப இருக்கிறது. தங்களுடன் பேசிக்கொண்டிருக்க இப்போது நேரமில்லை. மன்னிக்க வேண்டும்......... அடே! இந்தப் பெண்ணைப் பிடித்துக் கட்டுங்கள்!" என்று, சற்று விலகிப் போய் நின்ற வீரர்களைப் பார்த்துச் சசாங்கன் சொன்னான்.

அதைக் கேட்ட வீரர்கள் சிவகாமியை நெருங்கி வந்தார்கள்.

"தளபதி! ரொம்ப சந்தோஷம்! தென்னாட்டின் புகழ்பெற்ற நடன கலைவாணியைச் சிறை பிடித்தது உம்முடைய அதிர்ஷ்டந்தான். இந்த விசேஷ சம்பவத்தைச் சக்கரவர்த்தியிடம் நானே கூடிய சீக்கிரம் தெரியப்படுத்துகிறேன்......"

"ஓஹோ! அப்படியானால் பிக்ஷுவும் வாதாபியை நோக்கித்தான் பிரயாணம் கிளம்பியிருப்பதுபோல் தெரிகிறது......" என்றான் சசாங்கன்.

"ஆம், சசாங்கரே! ஆனால் சக்கரவர்த்தியிடம் இந்த விசேஷச் செய்தியைத் தெரிவிப்பதற்கு வாதாபி வரையில் நான் போக வேண்டியதில்லை. சற்று முன்னால் இந்தக் காட்டின் இன்னொரு புறத்தில் சக்கரவர்த்தியைப் பார்த்தேன்......"

"பொய்! பொய்! வாதாபி சக்கரவர்த்தி இதற்குள் வடபெண்ணை நதியை அடைந்திருப்பார்."

"பொய்யும் மெய்யும் விரைவிலே தெரியும், தளபதி! ஆனால் ஒரு விஷயத்தை ஞாபகம் வைத்துக் கொள்ளும். புலி தனக்கு இரையாகக் கொள்ள எண்ணிய மானின் மீது பூனை தன் கண்ணைப் போடக்கூடாது! ஞாபகமிருக்கட்டும்!" என்று நாகநந்தி கம்பீரமான குரலில் கூறியபோது, தளபதி சசாங்கனின் வாயிலிருந்து 'உம்' 'உம்' என்ற உறுமல் ஒலியைத் தவிர வேறெதுவும் வரவில்லை.

பின்னர், நாகநந்தி, சிவகாமியைப் பார்த்து, "பெண்ணே! நான் சொல்வதைக் கவனமாகக் கேள். அதன்படி நடந்து கொண்டால் உனக்கு ஒரு அபாயமும் நேராது. இவர்களுடன் தடை சொல்லாமல் போ! நல்லவேளையாக, நீ நடனக்கலை பயின்றவளாதலால், உன் கால்களில் வேண்டிய பலம் இருக்கும். நடப்பதற்கு நீ அஞ்சமாட்டாயல்லவா?" என்றார்.

இதுவரை சசாங்கன் — நாகநந்தி சம்பாஷணையைக் கவனித்த வண்ணம் கற்சிலைபோல் அசைவற்று நின்ற சிவகாமி, சட்டென்று உணர்வு வரப் பெற்றவளாய், "சுவாமி! என்னைப் பற்றி எனக்கு ஒரு கவலையுமில்லை. நான் எக்கேடாவது கெட்டுப் போகிறேன். இந்தப் பாவியினால் தங்கள் சிநேகிதர் பெரும் அபாயத்துக்கு உள்ளாகி விட்டார். ஐயோ! அவரைக் காப்பாற்றுங்கள்!" என்று கதறினாள்.

உடனே நாகநந்தி பிக்ஷு, "தளபதி! இந்தப் பெண்ணின் தந்தை எங்கே?" என்று கேட்க, சசாங்கன் ஒரு கோரச் சிரிப்புச் சிரித்த வண்ணம், "ஆஹா! உங்களுக்கும் அது தெரியவேண்டுமா?